# மகாகவி பாரதியாரின் காரைக்குடி வருகை



காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தில் 9—11—1919 எடுக்கப்பெற்றது.

இடமிருந்து வலம்: அ. மு. க. மு. க. கறுப்பன் செட்டியார், ராய. சொக்கலிங்கன்,
மகாகவி சுப்பிரமணிய பாரதியார், சொ. முருகப்பா, கி. நாராயணன் செட்டியார்.

நிற்பவர்: மு. நடராஜன்.

62-1

# சங்கமும் சொ. முரு. வும்

ராயசொ.
எஸ். இராமசாமி

### சங்கத் தோற்றம்

பிங்கள ஆண்டு ஆவணித் திங்கள் இருபத்தாரும் நாள் (10 - 9 - 1917) திங்கட்கிழமை நமது ஹிந்து மதாபிமான சங்கம், காரைக்குடியில் தோற்றுவிக்கப் பெற்றது. சுமார் நூறாண்டுகளுக்கு முன்னரே, கோவிலூர் ஆண்டவர் எனப் புகழுடன் விளங்கிய முத்துராமலிங்க ஞானதேசிக பரமாச்சாரிய சுவாமிகளால், அறச் செயல்களுக்கென்றே நிறுவப் பெற்ற திருவாசக மடத்தில் சங்கம் முதலில் தொடங்கப் பெற்றது. தொடங்கிய சில மாதங்களில், சிவன் கோவில் வடக்கு ரத வீதி மேல்புற மூலையில் உள்ள தரும வித்தியாசாலைக் கட்டிடத்திற்கு மாற்றப் பெற்று, ஆறு ஆண்டுகள், சங்கம் அங்கிருந்து வந்தது. அந்தக் காலந்தான், மிகவும் சிறப்பான பல பணிகளைச் சங்கம் செய்து வந்த காலம். சங்கத்தின் சரித்திரத்தின் சிகரமாகக் கருதத் தக்கது அந்த நாளே என்பது மிகையன்று. அதன்பின் சங்கம், பல இடங்களிற் குடியேறி, இன்று அழகிய, புதிய, சொந்தக் கட்டிடத்தில் இருந்து வருகிறது.

### சங்கத்தின் தொண்டு

நமது சங்கம் இடையிடையே செயலாற்றாது சில ஆண்டுகள் ஒடுங்கிக் கிடந்தபோதிலும், இப்பகுதிக்கு மிகச் சிறப்பான தொண்டுகளைப் பல ஆண்டுகள் செய்துவந்திருக்கிறது என்பதைச் சரித்திரம் கூறும். திரு. நெ. சி. விஸ்வநாத சாஸ்திரியார் என்ற வயது முதிர்ந்த ஓர் தொண்டர் மூலம், சங்கம் ஊர்கள்தோறும் நல்ல மதப்பிரசாரம் செய்து வந்திருக்கிறது; அறிஞர்களைக் கொண்டு எழுதப் பெற்ற துண்டுப் பிரசுரங்கள் லட்சக் கணக்கில் வெளியிட்டு மதத்தைப் பரப்பியிருக்கிறது.

### விவேகாநந்த புத்தகசாலை

ஹிந்து மதத்திற்கு ஆணி வேராக விளங்கி, இன்றைய உலகம் ஹிந்து மதத்தை மிகவும் சிறப்பாக மதிப்பதற்குக் காரணராக இருந்த விவேகாநந்த அடிகள், அவர் தம் அருமைக் குருநாதர்—கருவிலே திருவுடைய பெரியார்-இராமகிருஷ்ண பரமஹம்ஸ தேவர் ஆகிய இரண்டு அறிஞர்களின் அடிச்சுவட்டை இச் சங்கம் பெரிதும் பின்பற்றுவது. விவேகாநந்த அடிகள் பெயரால், ஓர் புத்தகசாலையை இச் சங்கம் நடத்திவருகிறது. தமிழில் பெரும் புலமை வாய்ந்திருந்த, மு. ரா. கந்தசாமிக் கவிராயர் அவர்களின் கிடைத்தற்கரிய பல நூல்கள் அடங்கிய நூல் நிலையத்தை இச் சங்கம், காளயுத்தி ஆண்டு ஆவணித் திங்கள் இரண்டாம் நாள் (18-8-1918) விலைக்கு வாங்கியது.

### இராமகிருஷ்ண கலாசாலை

இச் சங்கம், இராமகிருஷ்ண கலாசாலை என்ற பெயரால், காளயுத்தி ஆண்டு ஐப்பசித் திங்கள் முப்பதாம் நாள் (15 - 11 - 1918) ஒரு கலாசாலையைத் தொடங்கி மூன்று ஆண்டுகள் நடத்தி வந்தது. இக் கலாசாலைக்கு, தமிழ் நூல்களை நன்றாகப் பயின்று, அந்தக் காலத்தில் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் பட்டம் பெற்ற அறிஞர்

சு. சிதம்பர ஐயரவர்கள் ஆசிரியராக இருந்து நடத்திவந்தார்கள். இக் கலாசாலையில் தமிழ் இலக்கண இலக்கியப் பயிற்சி பெற்று முன்னேற்றம் அடைந்த அன்பர் பலர். ஹிந்து மதாபிமான சங்கம் ஆரம்பிப்பதற்கு முன்னர், நள ஆண்டு ஐப்பசித் திங்கள் பதினேழாம் நாள் (2-11-1916) தொடங்கி, தமது நண்பர்களுடன் ஆசிரியர் சிதம்பர ஐயரவர்களிடம், தமிழ் இலக்கண இலக்கியப் பாடம் கேட்டுவந்த அன்பர் சொ. முருகப்ப னர், இராமகிருஷ்ண கலாசாலையிலும் தொடர்ந்து தமிழ்ப் படித்து வந்தார்.

இலக்கியம் படிப்போர் நின்று விடவே, துன்மதி ஆண்டு கார்த்திகைத் திங்கள் இருபத்திரண்டாம் நாள் (7-12-1921) தொட்டு, இராம கிருஷ்ண கலாசாலை, ஆரம்பப் பாட சாலையாக மாறிச் சிலகாலம் நடந்தது. சங்க ஆரம்பத்தில், வாரந் தோறும் அங்கத்தினர் பேசிப் பழகுவதற்கென்று பயிற்சிக் கூட்டம் நடத்தி, அங்கத்தினர் பலரும் பேசிப் பழகி வந்தனர். சில காலம், "கம்ப நாடர்" ஆசிரியரும், கம்ப ராமாயணப் பிர சாரகரும் ஆகிய திரு. மோ. வே. கோவிந்தராஜ ஐயங்கார் அவர்கள் தலைமையில் வாரந்தோறும் திருக் குறள் வகுப்பு நடந்து வந்தது.

## விஜயம் செய்த பெரியார்கள்

மகாகவி சுப்பிரமணிய பாரதியார் சித்தார்த்தி ஆண்டு ஐப்பசித் திங்கள் இருபத்துநான்காம் நாள் (9-11-1919) காரைக்குடிக்கு விஜயம் செய்து சங்க அங்கத்தினர்களாகிய இளைஞர்களுடன் அளவளாவி, சங்கத்தைப் பற்றி அருமையான ஏழு பாடல்கள் பாடி அளித்திருக்கிறார்.

திருவாளர்கள், வ. உ. சிதம்பரம் பிள்ளை, சுப்பிரமணிய சிவா, வ. வே சு. ஐயர், சிவசண்முக மெஞ்ஞான சிவாச்சாரிய சுவாமிகள் (ஞானியார் சுவாமிகள்) விபுலாநந்த சுவாமிகள், வீர. சுப்பைய சுவாமிகள், ந. மு. வேங்கடசாமி நாட்டார் முதலிய புகழுடம்பு பெற்ற தேச பக்தர்களும் தமிழ் அறிஞர்களும் சங்கத்திற்கு வந்து தலைமை வகித்தும், சொற் பெருக்கு நிகழ்த்தியும் சிறப்பித்திருக் கிறார்கள்.

## திரு. வி. க.

சங்கத்தைப்பற்றி எழுதும் பொழுது தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களை நினையாதிருக்க முடியாது. சங்கத் திற்கும் அவர்களுக்கும் நெருங்கிய தொடர்பு உண்டு. முதலாவது ஆண்டு விழாவுக்கு அவர்களே தலைமை வகிப்பதாக இருந்தது. அவர்கள் மனைவி இவ் உலகு நீத்த காரணத் தால் வரமுடியவில்லை. இரண்டாவது ஆண்டிலும், ஆறாவது ஆண்டிலும், ஒன்பதாவது ஆண்டிலும், வெள்ளி விழாவிலும் பெரியார் திரு. வி. க. அவர்களே தலைமை வகித்து நடத்தித் தந்ததோடு, இன்று அழகாக அமைந் திருக்கும் நமது சங்கக் கட்டிடத்தைக் கட்டுதற்கு, கால்கோள் விழாவும் ஆற்றினார்கள். இக் கட்டிடத்தைச் சென்னை முதல் அமைச்சர் சக்கர வர்த்தி இராஜகோபாலாச்சாரியார் அவர்கள் நந்தன ஆண்டு ஐப்பசித் திங்கள் எட்டாம் நாள் (24-10-1952) திறந்து வைத்தார்கள்.

## சங்கம் கண்டவர்

இந்தச் சங்கத்தை, பல அன்பர் களைச் சேர்த்துக்கொண்டு ஆரம் பித்த பெருமை, அன்பர் முருகப்ப னார்க்கே உரியது. உட்சமய வேறு பாடு இன்றி, ஹிந்து மதத்தின் பெருமையை உலகறிய வளர்க்க வேண்டும் என்ற எண்ணம் அன்பர் முருகப்ப

னர் உள்ளத்தே தோன்றி, இச் சங்கத்தைத் தொடங்கினர். அந்தக் காலத்தில், அன்பர் முருகப்பனுர்க்கு வயது இருபத்து நான்கே. இன்று சங்கத்துக்கு ஆண்டு முப்பத்தாறு முடிவுறுகிறது. அன்பர் முருகப்பனுர்க்கு ஆண்டு அறுபது நிறைவுறுகிறது. சங்கம் கண்ட அன்பருக்கு, அவர் கண்ட சங்கம், அறுபதாவது ஆண்டைச் சிறப்பித்துக் கொண்டாடுவது பெருமை தருவது ஆகும். அறுபதாவது ஆண்டு நிறைவு என்பது தமிழ் மரபுப்படி ஓர் சிறந்த முறை ஆகும். ஒருவர் பிறந்த ஆண்டைத் திரும்பக் காண்பது மகிழ்ச்சிக்கு உரியது அல்லவா? விஜய - ஆவணி - ஏழாந் தேதி அன்பர் முருகப்பர் பிறந்தார். இன்று ஒரு சுற்றுச் சுற்றி, அதே விஜய - ஆவணி - ஏழாந் தேதி வந்திருக்கின்றது. இது கொண்டே தமிழ் மக்கள் அறுபதாம் ஆண்டைச் சிறப்பாகக் கருதுகின்றனர்.

## முரு-வின் பிறப்பும், மணமும், தொழிலும்

இங்கு அன்பர் முருகப்பனுரின் வாழ்க்கை வரலாற்றுச் சிறப்புகளைச் சிறிது கூறுவோம். அன்பர் முருகப்பர் விஜய ஆண்டு ஆவணித் திங்கள் ஏழாம் நாள் ( 21 - 8 - 1893 ) காரைக்குடியில் பிறந்தார். தந்தையார் திரு. சி. சொ. சொக்கலிங்கம் செட்டியார். தாயார் திரு. விசாலாட்சி ஆச்சி. முருகப்பர் இளமையில் திண்ணைப் பள்ளியில் கல்வி பயின்ரூர்; பரிதாபி ஆண்டு வைகாசித் திங்கள் இருபத்து மூன்ரும் நாள் (5 - 6 - 1912) காரைக்குடி முத்துப் பட்டினத்தில், அம்மான் மகளாகிய திரு. பொற்கொடியாள் ஆச்சியை மணஞ் செய்துகொண்டார்; மணஞ் செய்துகொண்ட பின், பரிதாபி ஆண்டு ஆவணித் திங்கள் பத்தாம் நாள் (25 - 8 - 1912) காரைக்குடியில் பாதரகுடி மடாதிபதி ஸ்ரீலஸ்ரீ வேங்கடாசலபதி குரு சுவாமிகளிடம் திரு ஐந்தெழுத்து உபதேசம் பெற்ரூர். சிறு வயதில் அடுத்தாளுக்குச் சென்று வந்த அன்பர் முருகப்பர், நகரத்தார் தொழில் முறைப்படி மலாயாவில் உள்ள ஈப்போ நகரத்தில் 1913 முதல் 1916 வரை தொழில் செய்து வந்தார். அங்கிருந்து ஊர் திரும்பிய பின்னர் பொதுவாழ்வில் ஈடுபடும் எண்ணம் உதித்தது. அவ்வெண்ணந்தான் முதன்முதலாக ஹிந்து மதாபிமான சங்கத்தைத் தோற்றுவித்தது.

## சமூகத் தொண்டு

ஞானிகள் பலரால், பன்னெடுங் காலமாக அருமையாகக் கட்டப்பட்ட ஹிந்து மதத்தின் கட்டுக் கோப்புக் குலைந்து, மதம் சீர்கெட்ட நிலைமையைப் போக்க எண்ணி மதாபிமான சங்கம் கண்ட அன்பர் முருகப்பர் உள்ளத்தில், சீருற்று விளங்கிய தனவணிக சமூகத்தின் குறைபாடுகள் உறுத்தவே, சமூகச் சீர்திருத்தத்தில் முனையத் தொடங்கினர்; ஹிந்து மதாபிமான சங்கங் கண்டு இரண்டு ஆண்டுகள் கழித்து, சித்தார்த்தி ஆவணி இருபத்து ஆரும் நாள் (11-9-1919) சமூக முன்னேற்றம் கருதி, "தன வைசிய ஊழியர் சங்கம்" என்ற ஒருசங்கத்தைத் தொடங்கினர். சமூகத்துக்கு, அந்தச் சங்கம் புரிந்த சேவை கணக்கிலடங்காதவை. அதற்கென "தனவைசிய ஊழியன்" என்ற பெயரோடு, ரௌத்தி - ஆவணி - இருபத்து நான்காம் நாள் (8-9-1920) ஓர் வாரப் பத்திரிகையை ஆரம்பித்தார். அந்த நாளில், தனவணிக சமூகத்தில் சீர்திருத்தித் தீர வேண்டிய பல குறைபாடுகள் இருந்தன. அதற்காக, பன்னெடுங் காலமாகக் கூடாதிருந்த 'தொண்ணூற்று

றூர்க் கூட்டம்' என்னும் தன வணிகர் மகாநாட்டை, கோவிலூரில் துன்மதி ஆண்டு ஆனித் திங்கள் முப்பத்திரண்டாம் நாள் (15-7-1921) கூட்டிச் சீர்திருத்தத் தீர்மானங்கள் செய்யக் காரணராக இருந்தவர் அன்பர் முருகப்பர். அவற்றுள், மிக முக்கியமானது பெண்ணுக்குப் பணம் வாங்குதல். பெண்ணைப் பெற்றவர் மணம் செய்து கொடுப்பதற்கு முப்பத்தையாயிரம் ரூபாய்வரை பெற்றுக் கொள்ளும் வழக்கம் அன்று இருந்தது. அம் முறையை ஒழிப்பதற்கு, தனவைசிய ஊழியர் சங்கமும், அதன் பத்திரிகையும், பலமான எதிர்ப்புக் கிடையே எடுத்துக் கொண்ட சிரமம் கொஞ்சமல்ல. இன்று அம் முறை தலைகீழாக மாறி, பெண்ணைப் பெற்றவர் மணம் செய்து கொடுப்பதற்குத் தவிக்கும் நிலைமையை, அன்று தலைமை வகித்து நடத்திய முருகப்பனார் தமது கண்களாலேயே காண்பது வியத்தற்கு உரியது அல்லவா?

## அரசியல்

"தன வைசிய ஊழியன்" பத்திரிகையை அன்பர் முருகப்பர் ஒன்றே கால் ஆண்டுகள் ஆசிரியராக இருந்து நடத்தினர். அதன்பின், துந்துபி வைகாசியில் 'குமரன்' என்ற பெயரால் ஓர் மாதப் பத்திரிகை தொடங்கி நடத்தினர். ருத்திரோத்காரி ஆண்டு ஆவணித்திங்கள் ஆறாம்நாள் (22-8-23) முதல்குமரன் வாரப்பத்திரிகைஒன்று வெளிவரலாயிற்று. அப் பத்திரிகைகள் வாயிலாக, அன்பர் முருகப்பர், அரசியல், சமூக, ஜீவகாருண்யத் தொண்டுகள் செய்து வந்தார்.

அரசியலில் அன்பர் முருகப்பர் காங்கிரசையே ஆதரித்தார். அந்த நாளில் "சுய ஆட்சி எனது பிறப்புரிமை" என்று கூறிய பெரியார் லோக மான்ய பால கங்காதர திலகர் பெருமானிடம் பெரிதும் ஈடுபட்டிருந்தார், முருகப்பனார். ரௌத்திரி ஆண்டு ஆனித்திங்கள் எட்டாம் நாள் (21-6-1920) திருநெல்வேலியில் திரு. எஸ். சீனிவாச ஐயங்காரவர்கள் தலைமையில் கூடிய, சென்னை மாகாண அரசியல் மகாநாட்டுக்கு, காரைக்குடியிலிருந்து பல அன்பர்களுடன் அன்பர் முருகப்பர் சென்றது, அரசியல் கூட்டத்தில் அவரது முதற் பிரவேசம் என்று கூறலாம். அந்தத் திருநெல்வேலி மகாநாட்டில் கூடிய காங்கிரஸ்காரர்கள் யார் யாரென்று இப்பொழுது யோசித்தால், நாம் ஆச்சரியப்படுவோம். டாக்டர் அன்னி பெஸண்ட் அம்மையார், மகா கனம் சீனிவாச சாஸ்திரியார், டாக்டர் சர். சி. பி. ராமசாமி ஐயர், காலஞ் சென்ற ராமனுதபுரம் ராஜா, இவர்களெல்லாரும் திருநெல்வேலி மாநாட்டுக்கு வந்த காங்கிரஸ்காரர்கள். இவர்களுடைய எதிர்ப்புக் கிடையேயும் அந்தத் திருநெல்வேலி மகாநாட்டில், ஆங்கில அரசாங்கத்தாரோடு ஒத்துழைக்கலாகாது என்று நிறைவேறிய தீர்மானம் குறிப்பிடத்தக்கது. காங்கிரஸ் தீவிர வாதத்தில் இறங்கியது திருநெல்வேலி மகாநாட்டுக்குப் பின்னரே.

## ஜீவகாருண்யம்

அன்பர் முருகப்பர், காரைச் சிவனடியார் திருக்கூட்டம் என்ற ஒரு சங்கத்தை, துன்மதி ஆண்டு பங்குனித் திங்கள் நாலாம் நாள் (17-3-1922) தொடங்கி அதில், மும்முரமாக ஈடுபட்டு ஜீவகாருண்யப் பிரசாரம் செய்து வந்தார். கோயில்களில், ஆடு கோழி முதலியவைகளைப் பலியிடுவதைத் தடுக்க ஊர்கள் தோறும் சென்று துண்டுப் பிரசுரங்கள் வழங்கியும், சொற்பெருக்கு ஆற்றியும், மாஜிக் லாண்டர்ன் மூலம் படம் காட்டி அதில் உள்ள தீமைகளை

விளக்கியும் பாராட்டத்தக்க சிறந்த தொண்டு செய்து வந்தார்.

## சுய மரியாதை இயக்கம்

ஜாதியால் உயர்வு தாழ்வு கற்பிக்கும் கொள்கையைத் திடமாக மறுத்து வந்த அன்பர் முருகப்பனுரை, சுயமரியாதை இயக்கம் பெரிதும் இழுத்துக் கொண்டுவிட்டது. அவ் இயக்கத்தில் கலக்கலானுர். அதனை வளர்க்க "சண்டமாருதம்" என்ற பெயரோடு திருச்சிராப்பள்ளியில் ஓர் தினசரிப் பத்திரிகையைச் சிலகாலம் நடத்தி வந்தார். அவ் இயக்கத்தில் சேர்ந்து, மகாநாடுகள் பொதுக்கூட்டங்கள் எல்லாவற்றிலும் பெரும் பங்கெடுத்துக்கொண்டு, அவ் இயக்கத் தலைவர்களுள் குறிப்பிடத்தக்க ஒருவராக விளங்கினுர்.

## விதவா விவாகமும் கலப்பு மணமும்

கணவனை இழந்த காரணத்துக்காக, விதவைப் பெயர் கொடுத்து ஒதுக்கி வைக்கும் தவருனமுறையை அன்பர் முருகப்பர் பெரிதும் கண்டித்து வந்தார். மனைவியை இழந்த கணவனுக்கு உள்ள உரிமையைவிட, கணவனையிழந்த மனைவியின் உரிமை இம்மியும் குறைவுபடலாகாது என்று அவர் கருதினுர். மனைவியை இழந்தவர் மறுமணம் செய்வது சரியாகுமானல், கணவனை யிழந்தோர் மறுமணம் செய்வதும் நியாயமே என்று அவர் கருதியது சரியே. எனவே விதவைகள் மறுமணம்செய்துகொள்வதைத் திடமாக அவர் ஆதரித்து வந்தார். மணவாழ்க்கையை வகுப்பு முறைகள் தடுப்பதையும் அவர் வெறுத்து வந்தார். பேச்சளவோடு இன்றி, செய்கையிற் காட்டவேண்டும் என்ற துணிவினல், மனைவியிருக்க, திருமதி மரகதவல்லியம்மையாரை, சுக்கில ஆண்டு ஆனித்திங்கள் பதினுரும் நாள் (29-6-29) திருப்பரங்குன்றத்தில் பெரியார் ஈ. வே. ரா. தலைமையில் கலப்பு விதவா விவாகம் செய்து கொண்டார். இவர்களுக்கு 'வீர பாண்டியன்' என்ற ஓர் மகன் இன்று பதினைந்து வயதை அடைந்திருக்கிருன்.

## தமிழிசை இயக்கம்

தமிழிசை இயக்கத்தில், அன்பர் முருகப்பர் பெரிதும் ஆர்வம் காட்டினுர். தமிழிசை வளர்ச்சியை நோக்கமாகக்கொண்டு, "மாணிக்க வாசகர் கண்ட மருந்தை" வாய்குளிரப் பாடிய பெரியார், மூத்துத்தாண்டவருக்குச் சுபானு ஆண்டு ஆவணித் திங்கள் பன்னிரண்டாம் நாள் (28-8-43) இசை விழாத் தொடங்கி நான்கு ஆண்டுகள் காரைக்குடியில் சிறப்பாக நடைபெற்றதற்கு அன்பர் முருகப்பர் காரணராக இருந்தார்.

## மகளிர் இல்லம்

அன்பர் முருகப்பர் ஈஸ்வர ஆண்டு பங்குனித் திங்கள் இருபத்தி எட்டாம் நாள் (10-4-1938) அமராவதிபுதூரில், "மகளிர் இல்லம்" என்ற ஒரு நிலையத்தை ஆரம்பித்து நடத்தி வருகிருர். மகளிர் இல்லத்தில் சிறுபிள்ளைகளுக்காக மாண்டிசோரி பள்ளிக்கூடம் ஒன்றும், ஆரம்பப் பாடசாலை ஒன்றும் ஏழைப் பிள்ளைகளுக்கு இலவசச் சாப்பாட்டு விடுதியும் நடந்து வருகின்றன. இப்பொழுது கம்பரது சிறந்த காவியமான இராம காதையில் உள்ள உயர்ந்த பாடல்களைத் தொகுத்து வெளியிடும் சீரிய பணியில் அன்பர் முருகப்பனுர் ஈடுபட்டிருப்பது பெரிதும் மகிழ்ச்சிக்கு உரியது.

## வாழ்த்து

அறுபதாண்டு கண்ட அன்பர் முருகப்பனுர், இன்னும் பல்லாண்டு வாழ்ந்து அரிய தமிழ்ப் பணியும், சிவத்தொண்டும் செய்து, எல்லா நலனும் பெற்று இன்புறவும், நமது ஹிந்துமதாபிமான சங்கம் பல்லாண்டு பல்லாண்டு வாழ்ந்துஉயரவும் எல்லாம் வல்ல இறையை வணங்குவோமாக.

# அம்பலவன் அருளால் வாழ்க!

## கவிமணியின் வாழ்த்து.

நாடும் நகரும் திருந்திநிதம்
நன்மை காணும் வழிகளெலாம்
தேடி அறிந்து தளராது
செயலில் போற்றும் குணமுடையோன்
பீடு பெறமா வணிகர்குலம்
பெற்ற வீர முருகப்பன்
ஆடும் தில்லை அம்பலவன்
அருளால் வாழ்க வாழ்கவே!

சொல்லும் சொல்லை ஐயமறச்
சொல்லி உண்மை காத்திடுவோன்
அல்லும் பகலும் உழைத்திடுவோன்
அழகார் அமரா வதிமகளிர்
இல்லம் கண்டு புகழ்கொண்டோன்
எங்கள் நண்பன் முருகப்பன்
வெல்லும் செந்திற் பன்னிருகை
வேலன் அருளால் வாழ்கவே!

பத்திமிகுந் தன்பர் பணிந்துநிதம் போற்றுகின்ற
அத்திமுகத் தண்ணல் அருளாலே—வித்தகன்
சிந்தைக் கினியதமிழ்ச் செல்வன் முருகப்பன்
சந்ததம் வாழ்க தழைத்து.

செட்டி நாட்டில் முதல் முதல் எனக்கு அறிமுக மான நண்பர் ஸ்ரீ.முருகப்பா அவர்களே. மேலும் எனது பாடல்கள் முதலில் பத்திரிகையில் வெளிவந்ததும் அவர்களது பத்திரிகையான "குமர"னில்தான். 'ஆசிய ஜோதி' நூலை வெளியிடத் தூண்டி, அதற்கான ஆங்கில முதல் நூலை எனக்கு அனுப்பி ஊக்குவித்தவர்களும் அவர்களே.

தேசிகவிநாயகன்.



திரு. வி. க. வும் சொ. முரு. வும்.
(1923)



மரகதவல்லி அம்மையார், வீரபாண்டியன், சொ. முருகப்பா.
(1950)

# தொண்டின் வடிவு

தோழர் சொ. முருகப்பாவை யான் நீண்ட காலமாக அறிவேன். அவர், எனது நெஞ்சங் கவர்ந்தவருள் ஒருவர். பொதுவாகத் தமிழ் நாட்டையும், சிறப்பாகச் செட்டிமார் நாட்டையும், வளர்த்த பெருமை அவர்க்கும் உண்டு.

தோழர், தமிழ்த் தண்மை; எழுத்தினிமை; சிந்தனைச் சுரங்கம்; பெண்ணுரிமை வைப்பு; தோழமை வண்மை; தொண்டின் வடிவு.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த பண்புகளால் ஆக்கப் பெற்ற வாழ்க்கையுடைய ஒருவர்க்கு, மணி விழா நடைபெறல் கேட்டுக் கழிபேருவகை எய்துகிறேன். அவ்விழாவைச் செட்டிமார் நாட்டு விழா என்று போற்றுகிறேன். விழா நன்கு நடைபெறுக. விழா உரிமை பூண்ட முருகப்பனர் வாழ்க; வாழ்க; நீடுவாழ்க; அவர்தம் வழி வழி வாழ்க.

**திரு. வி. க.**

## எனக்கும் பங்கு உண்டு

**சென்னை அரசாங்க முதல் மந்திரி**

**சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார்**

✵

சமுதாய சீர்திருத்தத்திலும் தமிழ் வளர்ச்சியிலும் முருகப்பா அவர்கள் பெரும்பணி செய்திருக்கிறார்கள். என்னுடைய பாராட்டை வெகு நாட்களுக்கு முன்னமேயே பெற்றார். அறுபது ஆண்டு மகிழ்ச்சியில் எனக்கும் பங்கு உண்டு.

**இராஜகோபாலாச்சாரி.**

## எனது நண்பர்

✵

இன்றுவரை பொது வாழ்வில் ஈடுபட்டுச் சேவை செய்து வந்த எனது நண்பர் திரு. சொ. முருகப்பா அவர்களுடைய 60-ம் ஆண்டு நிறைவு விழா நடைபெற இருப்பதைக் கேட்டு மிகவும் சந்தோஷமடைகிறேன்.

விழா சிறப்பாக நடைபெற இறைவனைப் பிரார்த்திப்பதுடன் பொது வாழ்வினில் ஈடுபட்டு மக்களுக்கு நல்ல பணிகள் பல செய்துவரும் திரு. செட்டியார் அவர்களுக்கு நீண்ட ஆயுளையும் திடகாத்திரத்தையும் அளிக்குமாறு எல்லாம் வல்ல இறைவனை வேண்டுகிறேன்.

**P. T. Rajan, M. L. A.**

---

## புதிய வாழ்வு

மலையேறுபவன் இடைவழியில் நின்று திரும்பிப் பார்க்கிறான். புறப்பட்ட இடத்தைவிட்டு எவ்வளவு உயரமாகத் தான் வந்தாய்விட்டது என்பது அப்பொழுது புலப்படுகிறது. அதைக் குறித்து உள்ளத்தில் மகிழ்வு ஊற்றெடுக்கிறது. வாழ்வில் அறுபது ஆண்டுகள் பூர்த்தி பண்ணுபவரது நிலைமையும் அத்தகையது. திரு. சொ. முருகப்பா அவர்களுடைய வாழ்வைத் தாமே விமர்சனம் பண்ண முடியும். மற்றவர்களுக்கும் அது இயலுகிறது; ஏனென்றால் தனக்கென வாழாது சமுதாயத்துக்கென வாழ்ந்து வரும் நன்மக்கள் கூட்டத்தைச் சேர்ந்தவர் அவர். இதுகாறும் அவர் செய்து சாதித்திருப்பவைகள் நம்மெல்லோருக்கும் மகிழ்வூட்டுகின்றன.

அறுபது ஆண்டுகள் நிறைவேறியதும் ஒருவர்க்குப் பழைய உடலில் புதிய வாழ்வு துவங்குகிறது. இவ்வுலக அனுபவங்களே அதற்கு மூலதனமாகிறது. திரு. சொ. முருகப்பாவிடம் அத்தகைய மூலதனம் வேண்டியவாறு இருக்கிறது. மேலும் அவருக்கு அமையவிருக்கும் இம் மண்ணுலக வாழ்வு பெருவாழ்வு ஆகுக. நம்மனோர்க்கு அதனால் பெருநன்மையுண்டாகுக. இறைவனது திருவருள் இதற்கெல்லாம் துணையாய் இருப்பதாகுக.

**சித்பவானந்த**

# வாழ்க முருகப்பா

தமிழ் மொழிக்குப் புத்துயிரும் தமிழருக்குப் புதுவாழ்வும் பாடித் தந்தவன் பாரதிப் புலவன். அப் புலவர் பெருமான் மாண்டு மறைந்த பின்பு அவருடைய உருவப் படத்திற்கு மாலை சூட்டி மகிழ்வோர் கோடானு கோடி மக்கள். ஆனல், அவர் உயிரோடிருந்த காலத்தில் அவருடைய அருமை பெருமைகளை உணர்ந்து, பாராட்டி ஆதரிக்கும் பாக்கியம் பெற்றவர்கள் மிகச் சிலரே. அந்த மிகச் சிலருள் ஒருவர் நமது அன்பர் திரு. சொ. முருகப்பா அவர்கள்.

சுமார் முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னல் நான் ஒரு சித்திரக்காரனுக இருந்தபோது, தொழில் முறையில் காரைக்குடிக்குச் சென்றேன். அப்போது அங்கே வசித்து வந்த, கம்ப ராமாயணத்தில் மிகச் சிறந்த விற்பன்னராகிய எனது நண்பர், காலஞ் சென்ற மோ. வே. கோவிந்தராஜ ஐயங்கார் அவர்கள், என்னை முருகப்பா அவர்களுக்கு ஹிந்து மதாபிமான சங்கத்தில் அறிமுகப்படுத்தினர். அறிமுகப்படுத்திய அவர், என்னை வெறும் சித்திரத் தொழிலாளி என்று மட்டும் சொல்லாமல் ஒரு கவிஞன் என்றும் சொல்லி, நான் அப்போது பாடியிருந்த 'தேசியக் கும்மி' என்ற நூறு தேசாபிமானப் பாட்டுகளடங்கிய கையெழுத்துப் பிரதியையும் முருகப்பாவிடம் காட்டினர். அதை வெகு ஆர்வத்தோடு வாங்கித் தாள்களைப் புரட்டி, அங்கங்கே சிற்சில பாட்டுகளைப் படித்துப் பார்த்த முருகப்பா அவர்கள் ''பாட்டுகள் பாரதியின் பாணியில் தீவிர தேசாபிமானம் நிறைந்தனவாக இருக்கின்றன. எங்கே நீங்களே முழுதும் ஒருமுறை பாடிக்காட்டுங்கள் பார்ப்போம்'' என்ருர். நானும் உடனே பாடுவதுபோல் படித்துக் காட்டினேன். படிக்கும்போதே முருகப்பா அவர்கள் இடையிடையே மெச்சி மகிழ்ந்து பாராட்டினர்.

திரு. சொ. முருகப்பா அவர்கள் மிகச் சிறந்த பண்பாளர்; வெகு நல்ல எழுத்தாளர்; பேச்சாளர்; செயலாளர்; சமூக சீர்திருத்தத்தில் மிகத் துணிவுடையவர்; காந்திய நன்னெறியில் கருத்துடையவர்; நாகரிகம் தவருத நட்பாளர்; நகைச்சுவை மிகுந்த சல்லாபி. இனிய முகமும் இன்சொல்லும் எளிமையும் அவருடைய சிறப்புகளிற் சிறந்தன. பொது நலத்தைக் கருதி எழுந்த பலவித இயக்கங்களிலும் பங்குகொண்டு தேறித் தெளிந்த கொள்கை கொண்டவர்.

அவர் நடத்திவரும் 'மகளிர் இல்லம்' தமிழகத்துக்கு ஒரு தனிப் பெரும் புதுமை. அது ஒன்றே அவருடைய திறமைக்குத் தகுந்த சான்ருகும். அதன் வெற்றியே அவருடைய வாழ்க்கையின் குறிக்கோள். அதனை ஓம்பி வளர்ப்பதே பொதுவாகத் தமிழ் நாட்டுக்கும் சிறப்பாகச் செட்டிமார் நாட்டுக்கும் கடமையாகும்.

அறுபது ஆண்டுகள் நிறையப் பெற்ற இவர், இன்னும் நெடுங்காலம் சுகமாக இருக்கவேண்டி, மனமார வாயார வாழ்த்தி இறைவனை வணங்குகின்றேன்.

வாழ்க முருகப்பா.

வளர்க 'மகளிர் இல்லம்'

**வெ. இராமலிங்கன்.**

## மிகப் பொருத்தம்

பழம் பெரும் தங்கள் சங்கம் நம் சிறந்த மதத்தின் பெருமையை உணரச் செய்வது எனினும், பிற மதங்களில் வெறுப்பை உண்டாக்குவதல்ல. இந்த ஸ்தாபனத்தை அமைத்த திரு. முருகப்பா அவர்களின் அறுபதாவது ஆண்டுநிறைவை, சங்கம் கொண்டாடுவது மிகப் பொருத்தமாகும். சங்கத்திற்கு என் பாராட்டுதலையும் திரு. முருகப்பா அவர்களுக்கு என வாழ்த்துக்களையும் தயவுசெய்துதெரிவிக்கக் கோருகிறேன்

அன்புள்ள,

**எம். பக்தவத்ஸலம்.**

---

## நம்பவே முடியவில்லை

அறிஞர் சொ. முருகப்பா அவர்களுக்கு அறுபதாம் ஆண்டு நிறைகிறதா? நம்பவே முடியவில்லை. அறிவின் முதிர்ச்சியில், அன்பின் கனிவில் அறுபது ஆண்டென்ன, அறு நூறு ஆண்டு நிரம்பியவர்தாம். உற்சாகத்தில், உழைப்பில், ஊக்கத்தில், இவர் இளைஞரே. இளமையின் ஆற்றலைப்பெற்றிருப்பது எல்லோருக்கும் கைகூடுவதன்று. அதுபோலவே, முதுமையின் தேர்ந்த அறிவு, இளமையில் கிட்டுவதன்று. அறிஞர் முருகப்பா அவர்களுக்கு இவ்விரு பேறுகளும் வாய்த்துள்ளன. ஹிந்துமதாபிமான சங்கத்தை 36 ஆண்டுகளுக்கு முன் இவர் நிறுவியபோது இவரது இளமையில் ஆழ்ந்த அறிவின் ஒளியைக்கண்டோம். இன்று இவர் முதுமையில் அந்த ஒளி முன்னினும் சுடர் விடுகிறது. அறிஞர் முருகப்பா ஆயிரம் ஆயிரம் பிறை கண்டு, இன்றுபோல் என்றும் தமிழுக்குப் பணி செய்யும் அறிவுலக அன்பராக விளங்க இறைவன் அருள்புரிவானாக!

**அ. சீநிவாசராகவன்.**

## புதுமைக்கும் புதுமை

அன்பர். சொ. முருகப்பர் அறுபதாண்டு வாழ்வில் அறு நூறாண்டுத் தொண்டுகளைச்செய்திருக்கிறார். புதிய செட்டிநாட்டை ஆக்கிய தமிழ்மணிகளில் அவர் முன்னணியில் நிற்கிறார். 1915 முதல் அவரை நான் அறிவேன். அவர் வாழ்வு வழி புதுமைக்கும் புதுமை; சீர்திருத்தத்திற்குச் சீர்திருத்தம்; தாவிச் செல்லும் சிவநதி போன்றது. சோம்பேறித் தண்டச்சோற்றை ஒழித்தல், பூரி தட்சிணைகளை விடுத்தல், தனவணிகர் பணத்தைக் கல்விக்கும் தொழில் வளத்திற்கும் ஈதல், பலி மறுப்பு, மாதர் மறுமணம் முதலிய பல துறைகளிற் சென்று வெற்றி கண்ட **சீர்திருத்தச் சிங்கம்** முருகப்பா! அவர் கலப்பு மணம்புரிந்து, வீரபாண்டியனுக்குத் தந்தையாக விளங்குகிறார். முருகப்பா தம்பதிகள் வாழ்க்கை தமிழ்ப் பண்பும், கலையெழிலும் மிக்கது. இவர்கள் நடத்திவரும் மகளிர் இல்லமும், பள்ளிக்கூடமும் தமிழகத்திற்கே தனிச் சிறப்பைத் தருவன. நான் கம்பர் விழாத் தலைமை வகிக்க வந்திருந்தபோது மகளிர் இல்லத்தைக் கண்டு மன மகிழ்ந்தேன். சொ. முருகப்பாவின் 'குமரன்' தமிழுக்குச்செய்த தொண்டு அளப்பரிதாகும்.

முருகப்பா தனவணிகர் மரபில் தோன்றித் தமிழுக்கும் தமிழருக்கும் தமிழகத்திற்கும் வாழ்வை ஈந்தார், ஈகிறார், ஈவார். முருகப்பா இன்னும் வளம் பெருகி வாழ்க! ஓம் சிவம்.

**யோகி. ஸ்ரீ. சுத்தானந்த பாரதியார்.**

# நான் நடை கற்ற கதை

பி. ஸ்ரீ.

காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்திலே, தமிழ்ப் பெரும் புலவர் வேங்கடசாமி நாட்டாரின் தலைமையில், பாரதியாரைக் குறித்துப் பேசுமாறு எனக்கு ஒரு கட்டளை கிடைத்தது. இப்பொழுது மணிவிழாக் கொண்டாடுகின்ற சங்க ஸ்தாபகர் திரு. சொ. முருகப்பாவின் கட்டளை தான் அது.

அந் நாளில் என் பேச்சுநடை எழுத்து நடையைக் காட்டிலும் முடமாகத்தான் இருந்தது. நாட்டார் தெளிந்த நடையில் தமிழ்ச் சுவை சொட்டச் சொட்டப் பேசித் தாய்மொழியின் பெருமையை நிலைநாட்டினார். "அந்த நடையில் பேச வேண்டும், எழுத வேண்டும்" என்று ஆசைப்பட்டேன். நாட்டாரின் எழுத்து நடை என்னை அப்படிக் கவர்ந்துவிடவில்லை. பிறகு, திரு.சொ. முருகப்பா திறமையாக நடத்தி வந்த "குமரன்" பத்திரிகையில் உதவி ஆசிரியராக வேலை பார்க்கத் தொடங்கினேன். அந்தப் பழக்கம்தான் என் தமிழ்நடை ஒரு திட்டமான உருவம் பெறுவதற்கு உதவியது.

காரைக்குடியில் **சொக்கலிங்கையா** என்ற பழம் பெரும் புலவரையும் பார்த்திருக்கிறேன். பாடசாலைச் சிறுமிகள் சத்தம் போட்டுக்கொண்டு போவது கண்டு, 'பெண்மணிகளல்லவா? ஒலி செய்வது இயல்புதானே!' என்று அப் பெரியார் நகைச்சுவையுடன் கூறியது இப்போதும் என் நினைவிற்கு வருகிறது. அழுத்தமான தமிழ்ப் புலமையும், சைவக் கோலமும், சீலமும் நெற்றி நிறைந்த நீறு போல் நெஞ்சு நிறைந்த அவரது புனித நீர்மையும் பாதி ஆஸ்திகம் பாதி நாஸ்திகமா யிருந்த என் உள்ளத்திலும் சற்று அழுத்தமாகவே பதிந்துவிட்டன.

தனவைசிய நாடு என்றதுமே பண்டிதமணியின் தமிழ்ச் செல்வம் சிறப்பாக நினைவிற்கு வருகிறது. சென்ற முப்பது ஆண்டுகளுக்கு அதிகமாகவே பண்டிதமணி கதிரேசச் செட்டியாரின் சிந்தைக்கினிய செவிக்கினிய செந்தமிழாற்றலுடன் நான் ஒருவாறு பழகி வந்திருக்கின்றேன்.

"குமரன்" பத்திரிகையில் நான் தொடர்பு கொண்டபின், தனவைசிய இளைஞர்களிடையே புதிய உணர்ச்சியும் தேசிய ஆர்வமும் சமரஸ பக்தியும் பொங்கியெழக் கண்டேன். அவர்களுடைய பாரதி பக்தி என்னைப் பெரிதும் கவர்ந்தது. அத்தகைய இளைஞர்களிடையே நல்ல நல்ல கருத்துக்களையும் புதிய புதிய விருப்பங்களையும் தேசியப் பெருங் கொள்கைகளையும் வகுப்புணர்வுகடந்தஹிந்துமதாபிமானத்தையும் மேன்மேலும் விதைத்துக் கொண்டிருந்தார், திரு. சொ. முருகப்பா தம் "குமரன்" வாயிலாக.

ஓங்கி வளரும் தமிழுக்குப் பண்டித நடையோ, தூய தமிழ் நடையோ இசைந்து வராது என்பதை 'குமரன்' ஆசிரியர் அந்நாளிலே நன்கு உணர்ந்திருந்ததால் நான் இவருடன் மனமுவந்து ஒத்துழைப்பது எளிதாயிற்று. பேச்சு மூலமாகவும் எழுத்து

மூலமாகவும் தீவிரமாகப் பிரசாரஞ் செய்து இளந் தனவணிக நாட்டைத் தேசத்தின் முன்னணியில் வைக்க இடையருது பாடுபட்டு வந்தவருக்குத் "தூய தமிழ் எது? வந்து கலக்கும் மாய வடசொல் எது?" என்று நினைக்கத்தான் அவகாசம் ஏது?

"குமரன் தான் முருகப்பா, முருகப்பா தான் குமரன்" என்று நினைக்குப்படி இரண்டறக் கலந்துவிட்டார், பத்திரிகையுடன் பத்திரிகைத் தலைவர். சிற்சில சமயங்களில் குமரன் பத்திராதிபர் முருகப்பாவுக்கு என்ற விலாசங்கூட முருகன் பத்திராதிபர் குமரப்பாவுக்கு என்று மாறிவருவதும் உண்டு. பத்திரிகை ஆசிரியரது உள்ளத்தின் ஒலிபரப்பே பத்திரிகை என்று கருதுமாறு நடைபெற்று வந்தது "குமரன்."

பாரதியாரின் மேதாவிலாசத்தையும் தமிழ்ப் புது வழிகளையும் பிரசாரம் செய்து வந்த "குமரனு"க்குக் கவிமணி. தேசிகவிநாயகம் பிள்ளையைக் கண்டுபிடித்த பெருமையும் உண்டு. அந்த நாளில் கவிமணியின் பெயர் பிரசித்தமாக வில்லை. "கவிமணி" என்ற பட்டம் சமீப காலத்தில் சூட்டப்பெற்றதுதானே? கவிமணியின் கவித்வ சக்தியை மேன்மேலும் தூண்டிப் புதுப் புதுப் பாடல்களைப் பாடச் செய்தவர் திரு. முருகப்பா. பாரதியாருக்குப் பின் இவரே கவிஞர் என்பதை அந்த நாளிலேயே திரு. முருகப்பாவும் நானும் கருத்தொருமித்துக் கண்டு இன்புற்ருேம். கவிமணியின் கவிதை நடையும் "குமரனின்" தமிழ் நடையை உருவாக்க உதவியது.

தமிழ் நாட்டின் சிறந்த பேச்சாளர்களில் ஒருவர் திரு. முருகப்பா. தனவைசிய நாட்டில் நானும் ஓரளவு நன்ருகப் பேசக் கற்றுக்கொண்டேன். எனினும் திரு. முருகப்பா பேசியபின் பேசுவதென்ருல் எனக்குப் பயந்தான். நகைச்சுவை சொட்டச் சொட்டப் பேசுவார் என்ருல் போதாது. நகைச் சுவையைக் கொட்டிப் பேசுகிறவர் இக் 'குமரன்' ஆசிரியர். இவரது பேச்சு நடை, எழுத்து நடைக்கும் ஒரு தனிச் சிறப்பான சுவைதந்து உயிர்ச் சக்தியும் தந்திருக்கிறது.

நான் நடத்திய 'கிராம பரிபாலனம்' என்னும் பத்திரிகையில் நொண்டி நொண்டி நடந்துகொண்டிருந்த நான் 'குமரன்' பத்திரிகையில் நிமிர்ந்து நேர் நடை நடக்கத் தொடங்கினேன். 'குமரன்' கைப்பிடித்து நடந்தும், மந்த நடைதான் நான் காரையில் கற்ற நடை.

**அந்தர் வந்தென**
**அந்திதன் கைதர**
**மந்த மந்த**
**நடந்தது வாடையே**

என்று கம்பன் வருணிக்கும் அந்தத் தென்றலின் அவ்வளவு இனிமையான மந்த நடையும் அல்ல. "மங்கல மங்கையராய் - திங்கள் நிறைந்து வரும் சேயிழையார் நடைபோல் தென்றல் அசைந்துவரும்" என்று பெயர் தெரியாத புலவர் ஒருவர் வருணித்திருக்கிருரே, அந்த மங்கலத் தென்றல் நடையுமல்ல, எனது மந்த நடை; எனினும் சொந்த நடை வாய்க்கப் பெற்றதாகப் பூரித்துப் போனேன்.

திரு. முருகப்பாவின் தமிழ் நடையோ தென்றல் போலவும் நடக்கும். சண்டமாருதமாகவும் வீசியடிக்கும். "சண்டமாருதம்" என்ற பெயரால் ஒரு சீர்திருத்தப்பத்திரிகைகூட இவர் பின்னுளில் நடத்திவந்தார். சிற்சில கருத்து வேற்றுமைகள் காரணமாக நான், 'குமரனை'விட்டுப் பிரிந்த பின்

டும் திரு. முருகப்பாவின் தமிழ் நடையையும் தளராத ஊக்கத்தையும் பாராட்டி வந்திருக்கிறேன். பிரிய மனத்தோடு பிரிய நேர்ந்ததுதானே?

"குமரன்" பத்திரிகையோடு "ஊழியன்" பத்திரிகையும் போட்டி போட்டுத் தனவைசிய நாட்டில் தேசீயப் பிரசாரமும் சீர்திருத்தப் பிரசாரமும் செய்து வந்தது. 'ஊழியன்' பத்திராசிரியரான திரு. ராய. சொக்கலிங்கனுருடனும் எனக்கு நெருங்கிய பழக்கம் உண்டு. நான் 'குமரனில் உதவியாசிரியராக இருந்ததுபோல், காலஞ்சென்ற ஆசிரியர் வ.ரா. 'ஊழிய'னில் உதவியாசிரியராக அமர்ந்திருந்தார். திரு. வ ரா. வும் நானும் நெருங்கிய நண்பர்களே. ஆனல் கருத்துலகிலோ தமிழ் நடை பற்றிய கொள்கையிற்கூட, அவருக்கும் எனக்கும் ஓயாத பூசல்தான்!

அந்நாளில் திரு. சா. கணேசன் இளங்குமரராக இருந்தார். இப்போது திருவண்ணமலை ஈசான்ய மடத்தின் அதிபராய்த் திகழும் ஸ்ரீ. ராமநாதஸ்வாமியும் இளங் குமரராய்க் 'குமரன்' கோஷ்டியை அந்நாளில் அணி செய்தவர். இவர் அப்போதும் சாது குணத்திலே. இந்த இளங் குமரர்களுடன் பழகுவதும் தமிழிலக்கியத்தின் அருமை பெருமைகள் குறித்து உரையாடுவதும் எனக்குப் பேரின்பமாக இருந்தன. அந்த இளைஞர் குழாத்தில் திரு. கணேசனின் நட்பையும் ஸ்ரீ. ராமநாதஸ்வாமியின் பழக்கத்தையும் இன்றும் பெரும் பேருக மதிக்கிறேன்.

தனவைசிய நாட்டைவிட்டுப் பிரிந்த பின் கொஞ்ச காலம் மதுரையிலும் சில ஆண்டுகள் எங்கள் திருநெல்வேலிச் சீமையிலும் கழித்தேன். தமிழ்ப் படிப்பு, முக்கியமாகக் கம்பராமாயண ஆராய்ச்சி, எனக்கு மூச்சுக்காற்ருகி விட்டது. ஆங்கில இலக்கிய உலகிலும் ஓடியாடி விளையாடியதுண்டு. "எழுத எழுதக் கைதிருந்தும்" என்று நம்பித் தமிழை எழுதி எழுதிப் பார்த்திருக்கிறேன். என் கையெழுத்து ஒருபோதும் திருந்தப் போவதில்லையென்பது முன்பே உறுதியாகிவிட்டது. எனினும் தமிழ் எழுத்து ஒருவாறு திருந்திய வடிவம் பெற்று நிமிர்ந்து நன்னடை நடப்பதாகவே நம்புகிறேன். இதற்கு ஒரு முக்கிய காரணம் எனது கம்பராமாயணப் பயிற்சி. பாரதியாரிடம் நான் கற்கத் தொடங்கிய தமிழ் நடை, கம்பன் கல்வியிலேதான் முதிர்ந்த வளர்ச்சி பெறலாயிற்று என்பது என் அபிப்பிராயம்.

இது அவசர யுகம் என்பதைப் பல்லாண்டுகளாகச் சென்னையில் உணர்கிறேன். அமைதியாகச் சிந்தித்து எழுத அவகாசம் பத்திரிகைக்காரர்களுக்குக் கிடைப்பது அருமை. பத்திரிகைச் செய்திகள் அரசியல் விஷயங்கள் மட்டுமல்ல, சிறு கதைகள், நகைச்சுவைக் கட்டுரைகள் முதலியனவும் எவ்வளவு அவசரமாய் எழுதப் படுகின்றன! தொடர் கதைகள்கூட "அவசரப்படேல்" என்ற விதியை மீறித்தான் தொடர்கின்றன; ஒன்றன்பின் ஒன்ருக. அந்த வேகம் உண்மையான உணர்ச்சி வேகத்திற்குச் சத்துரு; தமிழ் நடை தனக்குரிய முழு உருவம் பெறுதற்கு ஓர் இடையூறு என்பதில் ஐயமில்லை.

"முன்னுளில் வசனம் பேச்சளவில்தான் இருந்தது. இந் நாளில் பேசும் பேச்சளவாக வசனநடை எழுதுவது நலம் என்பதே சரியான கொள்கை. ஆனல், இக்கொள்கையைப் பண்டிதர்கள் இன்னும் ஒப்புக்கொள்ளவில்லை. இன்றைய எழுத்தாளர்களும் சரியாகப் புரிந்து கொண்டிருக்கிருர்கள் என்று சொல்ல முடியாது. பேச்சுத் தமிழை அப்படியே உருவச்சிதை

வும் இலக்கணப் பிழையும் கவனக் குறைவும் சேர்ந்த கொச்சை மொழி களின் ஒலிப்பதிவாக எழுதிவிடுவது தான் பேசும் பேச்சளவாக எழுது வது எனக் கருதுவது பெருந் தவறு. இலக்கணத்திற்கு இசைய மொழி களின் வடிவம் திருத்தமாகவே அமைய வேண்டும். எனினும் அழ கும் அழுத்தமும் உயிர்த்தத்துவமும், உள்ளத்தில் பொங்கும் உணர்ச்சி வேகமும் இலக்கணத்தையும் வென்று விடுகிற சக்திபெறும் என் பதையும் நாம் மறத்தலாகாது. எக் கருத்தையேனும் பேசப்புகுவோர் எப்படிப் பேசுவாரோ, அப்படி அமைய எழுதுவது ஜீவசக்திவாய்ந்த வசன நடை.

வாழும் மக்களுக்கு நேரும் இன்ப துன்பம், மகிழ்ச்சி, கவலை, சினம், பொருமை, பொறுமை முதலான உணர்ச்சிகளுக் கிடையே தாமாக விளையும் தமிழ்ச் சொற்களிலேதான். தமிழ் நடை கிடக்கிறது என்ற உண் மையைப் பாரதியார் அறிந்துகொண் டதுபோல், கம்பனும்தன் காலத்திலே கண்டுகொண்டு, தன் தனிப் பெருங் கவிதைக்கும் பயன்படுத்திக்கொண் டிருக்கிறான். தமிழுக்கே சிறப்பான இனிமையுடன் நேர்மையும் எளிமை யும் தெளிவும் இன்றியமையாதன என்பதைச் சங்கக் காலத்திலேயே நம் முன்னோர் அறிந்துகொண்டிருந் தனர் என்பதற்குச் சங்க இலக்கியமே சாட்சிதான்; இந்த அம்சங்கள் வசன நடைக்கு இன்றியமையாதவை.

"உள்ளத்தில் உண்மை ஒளி உண் டாயின், வாக்கினிலே ஒளி உண்டா கும்" என்று பாரதியார் கூறியிருப் பது வளரும் தமிழ் நடையின் இரகசி யத்தை உள்ளத்தில் கொண்டு எழுத் தாளன் தனக்கென்று ஒரு நடையை யும் போக்கையும் வகுத்துக்கொள்ள வேண்டும். முகம் கண்டும் நடைகண் டும் குரல் கேட்டும் ஆளைத் தெரிந்து கொள்வதுபோல், தமிழ்நடை கண் டும் தெரிந்து கொள்ளுமாறு எழுத்து அமையப் பெறுவோனே எழுத் தாளன்.

இந்த நடையே என் குறிக்கோள். இதுவே நன்னடை என்பது என் கொள்கை. "நன்னடை நல்கல் வேந் தற்குக் கடனே" என்பதாகப் பொன் முடியார் (சங்கப் புலவர்) பாடியிருக் கிறார். எனக்கு வசன நன்னடை நல்க வேண்டியதும் கவிவேந்தனாகிய கம்பன் கடமையென்று நம்பியிருக் கிறேன்.

என் குறிக்கோள் இன்னும் தூரத் தில்தான் ஒளிர்கின்றது. நான் நடை கற்றுவரும் கதை முடிந்தபாடில்லை. இந்தக் கட்டுரையின் தலைப் பெய ரைக்கூட நான் சரியாக அமைத்துக் கொள்ளவில்லை யென்றுதான் இப் போது தோன்றுகிறது. இவ்வளவு தூரம் தள்ளாடித் தடுமாறும் நடை யிலே குறிக்கோளை அடைவதுதான் எப்படியோ?

---

## நீடூழி வாழ்க

மணிவிழா இனிது நடைபெற்று திரு. முருகப்ப செட்டியார் அவர்கள் நீடூழி காலம் வாழ்ந்து மக்கட்குத் தொண்டாற்ற இறைவன் துணைபுரி வானாக.

அன்புள்ள,

**கரு. முத்து. தியாகராசன்**

# நல்ல தமிழன்

ஸ்ரீலஸ்ரீ. தெய்வசிகாமணி அருணசல தேசிக பரமாசாரிய சுவாமிகள்

உலகம் வாழ்கிறது; இயங்குகிறது. எதனுல்? தன்னை மறந்து பிறர் நலம் பேணுகின்ற பேரற உள்ளம் படைத்த பெருமக்களின் வாழ்வால் உலகம் வாழ்கிறது. இங்ஙனம் உலகை வாழ்விக்கும் பெருமக்களுள் ஒருவர் அன்பர் முருகப்பா அவர்கள். அவர்களுடைய சென்ற ஆண்டுகள் பொதுநலப் பணியிலேயே கடந்துள்ளன. இனியும் அப்படியேதான். இளமையிலேயே தொண்டின் நெறியோடு தொடர்பு கொண்டவர்கள் முருகப்பா அவர்கள். கம்பன் கவிதையை அனுபவிப்பதில் பெரிதும் ஈடுபாடுடையவர்கள். சில சமயங்களில் கம்பர் கவிதையை உணர்ச்சியோடு சொல்லும்பொழுது கம்பன் தான் திரும்ப வந்திருக்கின்ருனே என்று கருதுவார்கள் பலரும்.

நல்ல தமிழன்பர். தமிழ்ச் சுவை தேர்தலிலும் அதைப் பரப்புதலிலும் பெரிதும் ஆர்வம் காட்டுபவர்கள். தமிழ்நாட்டுக் கோயில்களில் தமிழிலும் வழிபாடுகள் நடைபெறுதல் வேண்டும் என்ற பேரார்வமுடையவர்கள். நகரத்தார்களிடையே பெரும் பொருட் செலவில் நடைபெற்று வந்த ஆடம்பரமான, பொருளற்ற சடங்குகளை அகற்றிச் சீர்திருத்தம் செய்த பெருமை முருகப்பா அவர்களுக்கே உரியது.

இன்று அவர்கள் எதிர்காலத் தமிழகத்தைச் சிறப்புற அமைக்கும் பணியில் ஈடுபட்டுள்ளார்கள். வருங்காலத் தமிழகத்தின் தாய்மை உலகம் சீர்பெறஇருக்குமானல் செந்தமிழ் நாடும் சிறப்புறத்தானே வேண்டும்? இதனை நினைந்து அருமையான முறையில் மகளிர் இல்லம் நடத்திவருகின்ருர்கள். மகளிர் இல்லம் தொடங்கின நிலையை வாசகர்களுக்கு நினைவு படுத்தினலேயே முருகப்பா அவர்களின் பணியின் பெருமையைத் தெரிந்துகொள்ள இயலும். காரைக்குடியில் இருந்த தமது சொந்த வீட்டை விற்ற தொகையை முதலாகக்கொண்டு மகளிர் இல்லம் தொடங்கினர்களாம். இத்தகு பேரருள் உள்ளம் படைத்த அன்பர் முருகப்பா அவர்கள் நீலமணிமிடற்று இறைவன் போல வாழ்க! வளத்துடன் வாழ்க! வாழ்க்கைத் துணைவியோடன்றித் தொண்டின் துறையிலும் துணை செய்து நிற்கின்ற திருமதி மரகதவல்லி யம்மையாரும் வாழ்க!

## அளவற்ற மகிழ்ச்சி

நண்பர் திரு. சொ. முருகப்ப செட்டியார் அவர்களுக்கு, தங்கள் சங்கச் சார்பில், அவர்கள் அறுபதாண்டு நிறைவுப் பாராட்டுக் கூட்டம் செட்டிநாட்டரசர், உயர்திரு. ராஜா சர். மு. அ. முத்தையா செட்டியார் அவர்கள் தலைமையில் நடைபெறுவதாகத் தெரிந்து அளவற்ற மகிழ்வுற்றேன். "இன்னும் பல்லாண்டு நெடும் பெரு வாழ்வுற்றுப் புகழும் சிறப்பும் எய்துக" என வாழ்த்துகிறேன். பெரியார் பெருமைக்கு உரியார் அன்ருே.

ச. சோமசுந்தர பாரதி.

# சீர்திருத்தச் செம்மல்

**சோம. லெ.**

பாட்டுக் கொரு புலவன் பாரதியாரால் பாராட்டப்பெற்ற ஹிந்து மதாபிமான சங்கத்தார் சொ. முருகப்பா அவர்களின் மணிவிழாவைக் கொண்டாடுவது மிகவும் பொருத்தமாகும். சங்கத்தை நிறுவிய பெரியாரின் 60ம் ஆண்டு நிறைவு நாளைக் கொண்டாடும் வாய்ப்பு எல்லாச் சங்கங்களுக்கும் ஏற்படுவதில்லை. அந்த நாள் வரும்போது, கருத்து வேறுபாட்டால் சங்கத்திற்கும் அதை நிறுவியவர்க்கும் தொடர்பு அறுந்துவிடுவதும் உண்டு. தம் வாழ்நாளில், சிறப்பாகத் தம்மைச் சுற்றி வாழுகின்ற மக்களால், பாராட்டப் படுவதும் அருமை. எனவே, சொ. முருகப்பா அவர்களின் மணி விழா சிறப்பாக நடைபெற இருப்பதை அறிந்து மகிழ்ச்சியடைகிறேன்.

சொ.முருகப்பா அவர்களின் பெயர் தமிழ் நாடெங்கும் பரவியிருக்கிறது. இதற்குக் காரணம் அவர்கள் பல நிலையங்களோடு தொடர்பு கொண்டு அவற்றின் வளர்ச்சிக்காகவே, வாழ்ந்து வந்திருப்பதாகும். அந்த நிலையங்களை மறந்துவிட்டு அவர்களை நினைக்க இயலாது. காந்தீயத்தைச் செட்டிநாட்டில் பரப்பிய ஒருசிலருள் முருகப்பா ஒருவர். அதற்கு மாறுபட்ட, அல்லது அதனின்றும் வேறுபட்ட, இயக்கங்களிலும் அவர் கருத்துச் சென்றதுண்டு. பொது நலத்தில் அவருக்குள்ள ஆர்வம், ஓய்ந்திருக்கக்கூடாது, ஏதாவது ஒரு பணியில் ஈடுபட வேண்டும் என்ற உயர்ந்த எண்ணம், தமிழ்ப்பற்று, சீர்திருத்தத்தில் ஈடுபாடு ஆகியவையே முருகப்பாவின் சிறப்பியல்புகளாகும்.

சீர்திருத்தச் செம்மலாக இன்று காட்சிதரும் முருகப்பா, ஹிந்து மதாபிமான சங்கத்தைத் தொடங்கினர் என்பதே என்னைப்போன்ற இளைஞர்கள் நம்ப இயலாததாக இருககிறது. இச்சங்கத்தின் கருத்துககளும் கொள்கைகளும் ஒருபுறமிருக்க, இது போன்ற ஒரு பெயருடன் ஒரு சங்கத்தைத் தொடங்க எந்தத் தமிழனாவது இன்று முன்வருவானா? காலத்தோடு ஒட்டி வாழுகின்ற பெருமகனாகிய முருகப்பா, கொள்கைகளிலும் மாறுபட்டு, பழமையின் சின்னமாகிய செட்டிநாட்டில் புதுமையின் சின்னமாகிய, சீர்திருத்தத்தைப் பரப்பினர். வாய்ச்சொல்வீரராக அவர் அமைந்துவிடவில்லை. முருகப்பா-மரகதவல்லியாகக் காட்சியளித்து வருகிறார். தமிழனுக்குச் சொல்லும் செயலும் ஒன்றாக இருக்க வேண்டும். அதற்குச் சான்றாக விளங்குபவர் முருகப்பா. அவர் வாழ்க!

முருகப்பாவின் தமிழ்ப்பற்று மூவகையானது. தமிழிசை இயக்கத்திற்கு அவர் செய்திருக்கும் தொண்டு மிகவும் பாராட்டுக்குரியது. அதற்குத் தமிழன்பர்கள் என்றென்றும் அவர்க்கு நன்றி செலுத்துவர். கம்ப ராமாயணத்தில் அவருக்கு உள்ள ஈடுபாடு அளவு கடந்தது. முன்னுரையாக, "கம்பன் காவியம்" வெளிவந்திருக்கிறது. தேர்ந்தெடுத்த பாடல்களுடன் தெள்ளிய முறையில் பெரிய பதிப்பு வெளிவர வேண்டும்.

அதுவே அவருடைய நிலைத்த பணியாக இருக்கக் கூடும். அவர்தம் முயற்சி இத் துறையிலும் வெல்க. முப்பதாண்டுகளுக்கு முன்னரே "குமரன்" இதழைத் தொடங்கிய சிறப்பு அவர்களுக்கு உரியது. பல இன்னல்களுக் கிடையேயும் இதை அவர்கள் நடத்திவந்தார்கள்; வேகமான நடையில் உறுதியான கருத்துக்களை அந்த இதழ்வாயிலாக அவர்கள் வெளியிட்டார்கள். எதைப்பற்றி எழுதினுர்களோ அந்தக் கருத்துக்கள படிப்பவர் மனத்தில் உறுதியாகப் பதியும் முறையில் அவர்களுடைய எழுத்து ஆற்றல் பெற்றிருந்தது. பேராசிரியர் சேதுப்பிள்ளை அந்த இதழில் எழுதிய கட்டுரைகள் பிற்காலத்தில் நூலாக உருவாயின. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் பாடல்கள்முதலில் வெளிவந்தது "குமரனி"லேயே ஆகும். பி. ஸ்ரீ. யின் சொல்லோவியங்கள் குமரனிலேயே மூகிழ்த்தன. ஈழநாட்டில் மட்டுமே புகழ்பெற்றிருந்த விபுலாநந்த அடிகளை இந்தியாவுக்கும் அறிமுகம் செய்துவைத்த பெருமை குமரனுக்கு உண்டு. வேறு எந்த இதழுக்காவது இவ்வளவு சிறப்பு உண்டா?

சிறுவர்களின் வருங்காலத்தில்ஆர்வம்நிறைந்த முருகப்பா, நடுக்காட்டில் மகளிர் இல்லத்தை நிறுவி, மெய் வருத்தம் பாராமல் காலத்திற்கேற்ற கல்வி அறிவை அவர்களுக்கு ஊட்டி வருகிறுர். அங்கு கல்வி பயிலும் பேறு பெற்ற சிறுவர் சிறுமியர் முருகப்பாவின் மன உறுதி, விடா முயற்சி, செயலாற்றுந் திறன், தமிழ்ப் பற்று ஆகியவற்றையுங் கற்றுக் கொள்வார்களாக.

இளைஞர்க்காக அல்லும் பகலும் பாடுபடும் அறுபதாண்டு இளைஞர் என்றும் இளையராய் வாழ்க!

## "ஒருவனே தேவன்"

நண்பர், உயர்திரு. சொ. முருகப்பா அவர்கள் தமிழ் நாட்டின் சிறந்த தொண்டர். பண்டைத் தமிழரின் நாகரிகம், பண்பாடு, கலாச்சாரம் அனைத்தையும் அவரிடம் காணலாம். 'ஒன்றே குலமும் ஒருவனேதேவனும்' என்ற கொள்கையுடையவர். சமூக சீர்திருத்தத்தில் மிக்க ஆர்வமுடையவர். சமய உணர்ச்சியும் நூல் ஆராய்ச்சியும் கம்பனிடம் விசேஷ பக்தியுமுடையவர். அப்பர் வாக்கு 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்பதைச் சிரமேல் கொண்டவர். அதற்கு அமராவதி புதூரில், அவர் நடத்தி வரும் 'மகளிர் இல்லம்' தக்க சான்று. இது போன்ற பணிகள் பல புரிய அவருக்கு இறைவன் அருள் புரிவாராக. அவர் நீடூழி வாழ்க.

எஸ். நடராஜ நாடார்.

---

## மகளிர் இல்லம்

நன்மகளி ரில்லம் நலமாய் நிறுவியோன்
தன்மகுண முள்ள தனவணிகன்
— பொன்மணியாம்
ஆய அறுபதாம் ஆண்டுவிழா வாழியே
நேயமுரு கப்பா நிலைத்து.

கிருபானந்தவாரியார்.

---

## சிவநேச பண்பு உடையாய்!

சீர்திருத்தச் செம்மால்!
சிவநேசப் பண்புடையாய்!
ஊர்திருந்தி வாழ
உழைத்தோனே—பார்திருத்தம்
செய்யும் முருகப்ப!
செவ்வேள் திருவருளால்
உய்யும் விழாக்
கொண்டாய் உவந்து.

அன்பு. கருணையானந்தர்.

# சீர்திருத்த வீரன்

௧ பொருளும் கல்வியும் பிறபல சீர்மையும் பொருந்தி,
அருள்கொள் காரைமா நகரினில் அறிவினுற் சிறந்து,
மருள்கொள் பண்டைய தீவழக் கங்களை மறுத்தோன்;
அருமை நூல்பல பயில்முரு கப்பனும் அறிஞன்.

௨ தானும் தன்னுடை நண்பரும் தம்நலம் தவிர்த்து,
தேனும் பாலுமே சேர்ந்தெனச் சொற்பொழி வாற்றி,
ஊனந் தந்திடும் பயனிலாச் சடங்கினை ஒழித்தோன்;
ஆனந் தந்தரும் சீர்திருத் தப்பயன் அடைந்தோன்.

௩ புதிய கொள்கையைப் பரப்பிய இவன்தனைப் பொல்லார்,
அதனு டைப்பயன் இன்னதென்று அறிந்திடற் கியலார்,
மதியி லாச்செயல் இஃதென உளம்மிக மயங்கி,
எதிர்இ ழைத்திடச் சற்றுமோர் மனத்தளர் வில்லான்.

௪ சொல்லல் யார்க்குமே எளியவாம் எனுங்குறை துடைத்து இங்கு,
அல்லல் மன்னுயிர்க் காதலை ஊக்கமோடு அகற்றி,
நல்ல கொள்கையர் பலருமே புகழ்ந்திட நடந்து,
தொல்லை செய்திடும் மடவழக் கங்களும் தொலைத்தோன்.

௫ இளமை யேமுதல் இனையவன் திரவியம் ஈட்டில்,
வளமி குந்திடும் அரசர்போல் வாழ்வெலாம் பெறுவான்;
உளம தால்அதை விரும்பிடான்; உழைப்பதில் என்றும்,
அளவி லாவிழை வுற்றனன்; அதுபெரி தன்றே.

௬ ஆதி யில்திரு நீறணிந்து அரனெழுத் தைந்தும்,
ஓதி ஊர்தொறும் அவன்புகழ் உரைத்தனன்; பின்னர்,
சோதி யாம்இறை வற்குநாம் ஆற்றிடும் தொண்டால்,
யாது மேபயன் கடவுளுக் கிலையென அறிந்தான்.

௭ நிகரில் அவ்வறிவு உற்றநாள் தொடங்கிஅந் நிலையில்,
புகலி டம்தெரி யாதநம் சோதரர் போன்ற,
மிகு துயர்ப்படும் மக்களுக் குழைத்தலே மேலென்று,
அகம திற்சிறிது ஐயமி லாதறி வுற்றான்.

௮ தன்ன லங்கரு தாதுல கோர்தமக் குழைக்கும்,
மன்ன வன்முரு கப்பனைப் போற்சில மாந்தர்,
இன்னல் நீங்குமாறு இதமொழி நாட்டினில் இசைப்பின்,
பொன்ன கர்ப்பெயர்த் துறக்கமா இப்புவி பொலியும்.

௯ கலப் புணவிலும் மணக்கலப் பிலும்கருத் தாழ்ந்தார்,
விலக் கொணுவகை அவைகள்பே ரறமென விளக்கி,
மலைக்கு நேர்எதிர்ப்பு இருப்பினும் மலைவிலான் புகழை,
சிலச்சில் பாலினுல் கூறுதற் கியல்வனோ சிறியேன்.

௧௦ இன்னும் பற்பல ஆண்டிவன் வாழ்ந்துநம் மிடையே,
பன்ன லம்தரும் சாதிஒன் றுதலைப் பார்த்தும்,
கன்னல் நேர்மொழி யார்முழு உரிமையைக் கண்டும்,
மன்னும் தன்மைகள் யாவையும் பெற்றுமே மகிழ்க.

மு. கிருஷ்ண சர்மா




# செயற்கரிய செய்த பெரியார்

திருவண்ணுமலை ஈசானிய மடத்து அதிபர்
**திருப்பெருந்திரு. இர்ாமனுத சுவாமிகள்.**

செயற்கரிய செயல்களை அனுயாசமாகச் செய்து முடிக்கும் திறன் படைத்தவர், அன்பர் சொ. முரு. அவர்கள். அத்தகைய செயல்கள் ஒன்றல்ல, இரண்டல்ல; பலப்பலவாம்.

ஸ்வாமி விவேகானந்தர் நமது ஹிந்து மதத்தின் உயரிய சித்தாந்தங்களை உலகுக்கு உணர்த்தியமை, நமது அன்பர். முரு. அவர்களைச் சமயப்பணி புரியத்தூண்டியது. அது காரணமாக, தனவணிக நாட்டின் தலைசிறந்த நகரமாகிய காரைக்குடி மாநகரில் "ஹிந்து மதாபிமான சங்கம்," "இராமகிருஷ்ண வித்தியாசாலை," "விவேகானந்த நூல் நிலையம்" ஆகியன கண்டு, சமுதாயத் துறையிலும் இலக்கியத் துறையிலும் அவர்கள் ஆற்றியுள்ள, ஆற்றிவரும் பணிகள் அளவிறந்தனவாகும்.

மேலும் "தனவைசிய ஊழியர் சங்கம்," "காரைச் சிவனடியார் திருக்கூட்டம்" ஆகியவற்றின் வாயிலாகவும், "தனவைசிய ஊழியன்" "குமரன்" ஆகிய பத்திரிகைகளின் வாயிலாகவும், தனவணிக இளைஞர்களைத் தட்டிஎழுப்பி, உலகியல் அறிவை ஊட்டி, அவர்களின் உள்ளங்களைப் பண்படுத்தி நாட்டுப் பணி, சமூகப் பணிகளில், ஈடுபடுத்திய பெருமை அன்பர் முருகப்பா அவர்களுக்கே உரியது.

அன்பர். சொ. முருகப்பா அவர்களுடன் பால்யம் முதல் உடனிருந்து பணிபுரியும் பேறு எனக்குக் கிடைத்தது. அவர்கள் உறவு காரணமாக ஹிந்துமதாபிமான சங்கத்திற்கு விஜயம் செய்த ஞானத் தபோதனர்கள், சமயப் பெரியார்கள், முத்தமிழ்த் துறையின் முறைபோகிய உத்தமர்கள், தன்னலங் கருதாத தலைவர்கள், ஆகியோருடன் நெருங்கி உறவாடவும், தொண்டு செய்யவும் சந்தர்ப்பம் கிடைத்தது. அதற்குச் சந்தர்ப்பம் அளித்த அன்பர். முருகப்பா அவர்களுக்கு நான் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆண்டு அறுபது நிரம்பியபோதிலும், உடலும், உள்ளமும், உரையும் சோர்வு அறியாது இளமை நிறைந்து விளங்குவது அன்பர் அவர்களின் சஞ்சலமற்ற திடசித்தத்தை நன்கு உணர்த்துவதாகும்.

அன்பர் அவர்கள் என்றும் இளமை குன்ருது, வாழ்க்கை நலம் அனைத்தும் வாய்க்கப் பெற்று, பற்றில்லாப் பணியாற்றுவதற்குத் திருவருள் துணைநிற்குமாறு மேலொரு பொருளுமில்லா மெய்ப்பொருளை இறைஞ்சுகின்றேன்.

அன்பர் சொ. முருகப்பா அவர்களை ஏட்டிலும் பாட்டிலும் வாழ்த்துவதுடன் நம் கடமை தீர்ந்துவிடமாட்டாது. அவர்கள் தம் வாழ்வின் இலட்சியமாகக் கொண்டுள்ள சீரிய பணிகளை நன்கு நிறைவேற்றி வைப்பதே நமது உண்மையான கடமையாகும்.

**வளங்கள் ஓங்குக! வாழிய எல்லாம்!**






## அறுபது ஆண்டுகள் ஆயினவா?

'முருகப்பா அவர்கட்கு அறுபது ஆண்டுகள் ஆயினவா?' என்னும் வினு என்னை ஒரு கணம் வியப்பிடை ஆழ்த்திவிட்டது. செட்டிநாட்டின் இணையற்ற இளைஞர் தலைவராய் இன்றுவரை அவர் விளங்கி வருகின்ற காரணத்தாலும், மிகுதியும் இளைஞர் சூழலில் வாழ்வதாலும் எண்ணமும் செயலும் மாரு இளமையோடு இன்றும் அவரிடம் நின்று நிலவுவதாலும் அறுபது ஆண்டு நிறைந்த முதியவராய் அவரை நான் எப்படி எண்ண முடியும்?

முருகப்பாவின் வாழ்வோடு செட்டியார் சமூக சீர்திருத்தம், கலை, தமிழ்த் தொண்டு முதலியன இணைந்து வளர்ந்திருப்பதாகவே நான் எண்ணி வருகிறேன்.

தமிழ்நாட்டின் பத்திரிகை உலகில் 'குமரன்' தோன்றி, புதிய எழுச்சி மிகுந்த ஒரு சகாப்தத்தையே உண்டாக்கியது என்று கூறுவது மிகையாக மாட்டாது.

முருகப்பாவின் சமூக சீர்திருத்தச் சொற்பொழிவுகளை அங்காந்த வாயோடு அமர்ந்து கேட்ட நாட்கள் என் நினைவிலே ஒன்றன் பின் ஒன்ருய் இப்பொழுது ஓடி வருகின்றன. சமயோசிதமாகவும், சந்தர்ப்பமறிந்து பேசுவதிலும் அவருக்கு இணை அவரேதான். முருகப்பாவின் பல கொள்கை கோட்பாடுகளுக்கிடையே அவர் என்றும் தமிழை மறந்ததில்லை என்பதை நாம் ஒருபோதும் மறகக முடியாது. முருகப்பா பல்லாண்டு பல்லாண்டு வாழ்க!

வி. சு. திருநாவுக்கரசு

## அனைவரும் போற்றும் அண்ணன்!

"சீரியநற் புலவ ரெல்லாம் ஒன்று கூடி, சிறப்புடைய இலக்கியங்கள் எடுத் தியம்பிப் பாரிடையே தமிழ்ப் புகழைப் பரவச் செய்த "குமரன்" ஆசிரியர் பல்லாண்டு வாழ்க! என எழுத்தாளர் சார்பாக வாழ்த்து கிறேன்!

சீர்திருத்தம் பேசிப் பயனில்லை யென்று, செயல் மூலம் சாதி ஒழிய வழி காட்டிய செம்மலே வாழ்க! எனச் சீர் திருத்த நண்பர்களின் சார்பாக உங்கள் சிறப்பைப் போற்று கிறேன்!

அரையினிலே ஆடையினை எடுத்தணிய அறியாத சிறு பருவக் குழந்தைகட்கு, உரைப்பரிய கல்வி நலம் ஓங்கச் செய்து உயர்வுமிகு மாண்டிசோரி திட்டத்தைச் கையாண்டு வெற்றிகண்ட முருகப்பாவுக்குக் குழந்தைகளின் சார்பாக வாழ்த்துக் கூறுகின்றேன்.

அறுபான் ஆண்டு ஆகியும், அனைவர்க்கும் "அண்ணன்" ஆக விளங்கும் அண்ணலே! உங்களால் தமிழும் தமிழ் நாடும், இனிப் பெரும் நலம் அடையும் என இந்நாட்டு இளைஞர்கள் அனைவரின் சார்பாக, பல்லாண்டு கூறுகின்றேன். வணக்கம்.

அரு. இராமலிங்கம்.

# துணிவுடையவர்

**மகாமகோபாத்தியாய, பண்டிதமணி மு. கதிரேசன் செட்டியார்.**

நம் தனவணிக மரபில் தோன்றி, சமூக ஆசாரம், கடவுட்கொள்கை முதலியவற்றின் சீர்திருத்தத்திற்காகப் பல ஆண்டுகளாக உழைத்து வந்தவர்களும், தம் குறிக்கோளை நிலைநிறுத்துதற்குக் கருவியாகச் சிறந்த பத்திரிகையைப் பல ஆண்டுகளாக வெளியிட்டு வந்தவர்களும் ஆகிய திரு. முருகப்பா அவர்களுக்கு அறுபது ஆண்டு நிறைவுறும் செய்தி, தமிழ்நாட்டிலுள்ள அனைவருக்கும் மகிழ்ச்சி விளைவிப்பதாகும் திரு. முருகப்பா அவர்கள் நல்ல தமிழ்க் கல்வி உடையராய்ச் சொற்பொழிவு செய்வதில் திறமையும், தமிழ் நடை எழுதுவதில் கற்றவர் வியக்கும் வண்ணம எழுதும் வன்மையும் உடையவர். தாம் கருதிய சீர்திருத்தக் கொள்கைகளைச் சொல்லளவிலன்றிச் செயலிலும் மேற்கொள்ளும் துணிவுடையவர். நேர்மை யென்று கருத்தில் தோன்றியதை, அஞ்சாமல் வெளியிடும் இயல்பினர். மக்கள் நலங் குறித்து மகளிர் இல்லம் ஏற்படுத்தி நடத்தி வருதலோடு குழந்தைகளைப் பயிற்றும் மாண்டிசோரி அமைப்பையும் திருத்தமுறையில் நடத்தி வருகின்றவர். தம்மரபில் தோன்றிய நூற்றுக் கணக்கான இளைஞர்களுக்குச்சிறந்த பயன் விளைத்து வரும் பல கொள்கைகளை மேற்கொள்ளும்படி கற்பித்து ஊக்கி வருகின்றவர். கற்றோரும், மற்றோரும் வியக்கும் வண்ணம் பேச்சும் எழுத்தும் சிறக்க ஆற்றுபவர்.

இத்தகைய அரிய பல குணஞ் செயல்களையுடைய திரு. சொ. முருகப்பா அவர்களின் அறுபதாம் ஆண்டுவிழா சிறப்புற நடைபெறவும், அவர்கள் இன்னும் பல்லாண்டு இந் நிலவுலகத்தில் வாழ்ந்து மக்களுக்கு நலம் புரியவும் வேண்டும் என என் நெஞ்சத் தாமரையில் எழுந்தருளியிருக்கும் இறையருளை நினைந்து நாவார வாழ்த்துகின்றேன்.

---

# நான் அறிந்த முருகப்பா

எளிய வாழ்க்கையன், உயரிய சிந்தனையன், வாயில்தூய்மையன், மதியில் கூர்மையன், ஆய்மையில் அறிஞன், கலைதுணிந்த கேள்வியன், சிறந்த எழுத்தாளன், சொல்லாட்சியில் சிறப்பு மிக்கோன், கேட்டார்ப்பிணிக்கும் சொற்பொழிவாளன், பகுத்தறிவில் தீவிரன், சிக்கல்களை அலசி ஆய்ந்து இலகு முறையில் சொல்லும் ஆற்றலோன். அஞ்ஞானம், மடமை, கோழைத்தனம், மாய்மாலம், பொய் குறளை, அழுக்காறு, கயமை, அன்ன பிற யாவும் அருவருத்துக் கண்டிப்போன். பண்டைய காலத்து நம் நாட்டுப் பண்புகளெல்லாம் உடையோன். இக்கால கலாசாரம் யாவையும் தன தாக்கியோன். வருங்கால சிக்கலுக்கு வகைகாண்போன். தமிழ் நாட்டுப் பெண்கள் உயர்நலம் பெறச் சதா காலம் உழைப்போன்.

ஆன்றவிந்தடங்கிய கொள்கை இச் சான்றோனும் அவன் தரும பத்தினியும் அவர்கள் நடத்துகிற மகளிர் இல்லமும் நீடுழி வாழ்க!

A. C. பால் நாடார்.

# தமிழாசிரியர்

கி. ஆ. பெ. விசுவநாதம்.

அன்பர் திரு. சொ. முருகப்பா அவர்கட்கு அறுபதாம் ஆண்டு நிறைவெய்துகிறது என்ற செய்தி என்னை மகிழச் செய்தது. அவர் அன்றும் இளைஞர்; இன்றும் இளைஞர்; என்றும் இளைஞரே!

அவர் மிகச்சிறுவயதிலேயே சமயப் பற்றுக்கொண்டு செய்த சமயப் பிரச்சாரமும், தொண்டும் இன்னும் என் முன் காட்சியளித்துக்கொண்டிருக்கின்றன.

சமயப் பற்று மிகுந்து முழங்கிய போதும அவர் ஒரு சீர்திருத்தவாதியாகவே திகழ்ந்தார். சமயத் துறையிலும் அவர் சீர்திருத்தம் செய்ய முனைந்தார். பின்காலப் போக்கில் அது அவரை ஒரு சீர்திருத்தவாதியாகவே ஆக்கிவிட்டது.

சமூகப் பற்றும் அவருக்கு அதிகம். நாட்டுக்கோட்டை நகரத்தார் சமூகம் பிற சமூகங்களைப் போன்று முன்னேறியாக வேண்டும் என்று அவர் அரும்பாடுபட்டார். துடி துடித்துத் தொண்டாற்றினர். தானும் சீர்திருத்தப் பாதையில் பிறருக்கு முன் மாதிரியாக நடந்து காட்டினர். அவர் இருபது ஆண்டுகளுக்கு முன்பு காரைக்குடியில் செட்டிநாட்டு ராஜா அவர்கள் தலைமையில் நடைபெற்ற 'குமரன்' பத்தாம் ஆண்டு விழாக் கூட்டத்தில் நன்றி கூறியபோது கூறிய சொற்கள் :

''ஒன்று நகரத்தார் சமூகம் வாழ்ந்தாக வேண்டும், இன்றேல் அது அழிந்து ஒழிந்தாக வேண்டும்'' என்பதுதான்.

அன்பர், முருகப்பா நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் கொண்ட ஒரு நல்ல இளைஞர். அவரது உள்ளம் என்றும் இளமையுடையது. தொண்டு செய்வதில் சிறந்து விளங்குபவர். ஆக்கமும், ஊக்கமும், அதிகம் கொண்டவர்.

அன்று பல பத்திரிகைகளின் ஆசிரியராக விளங்கினர். அவற்றுள் ஒன்று திருச்சியில் அவர் நடத்திய 'சண்டமாருதம்' எனும் தினசரியாகும். இத் துணிவு சென்னையிலுள்ள பத்திரிகாசிரியர்களை அன்று திடுக்கிடச் செய்துவிட்டது.

இன்று தமிழாசிரியராக விளங்குகிறார். நல்ல புலமை உடையவர். சிறந்த ஒழுக்கம் உடையவர். அவரது தொண்டு தமிழகத்திற்கு என்றென்றும் தேவை.

திரு. சொ. முருகப்பா அவர்கள் இன்னும் பன்னெடுங் காலம் உடல் நலத்தோடு வாழ்ந்து, நாட்டிற்கும், மொழிக்கும், மக்களுக்கும், நற்றொண்டு செய்து சிறப்படைய வேண்டும் என இந்த நல்ல நாளிலே வாழ்த்துவோமாக.

---

### சிவன் அருளால் வாழ்க.

நாற்றிசையும் போற்றுமெங்கள் நண்பன் முருகப்பன்
தோற்றுவித்த இந்துமதத் தொல்சங்கம் — ஏற்றம்
தவழ்ந்திடவே யன்னுன் சாந்திவிழாப் பெற்றான்
சிவனருளால் வாழ்க செழித்து

சேவு. மெய்யப்பன்.

# வழிகாட்டும் வள்ளல்

வித்வான். கதி. சுந்தரம்.

இலக்கிய நுட்பத்தை எல்லாம், எல்லோரும் புரிந்துகொள்ளுமாறு எடுத்தியம்பும் ஏந்தலே! வைகைமணலினும் வாழிய பலவே என வாழ்த்துகிறான் இலக்கியவாதி.

அரசியல் ஒரு சூதாட்டம். அதில் வெற்றிபெறுவது என்பது எளிதல்ல. சூழ்நிலை உணரும் சக்திபெற்றவனே வெற்றிபெறுகிறான் எனக் கூறி வழி காட்டும் வள்ளலே! இன்றைய இன்பம் என்றும் நிலவுக! என நல்லாசி கூறுகிறான் அரசியல்வாதி.

சமூகம்என்பது நெருஞ்சிமுள்ளின் நடுவே நீட்டிவிடப்பட்ட ஈட்டி முனை. சீறும் பாம்பு, பாயும் புலி, பயமுறுத்தும் சிங்கம், இவை எல்லாம், சமூகத்தின் பக்கத்தில் நிற்கவே பயப்படும் என்றால், அதன்பண்பை, பகட்டைக் கூறவும் வேண்டுமோ? இத்தகைய மாசுபடிந்த சமூகத்தின் போக்கை மாற்ற, வழிகாட்டி, அஞ்சாது நெஞ்சத் துணிவுகொண்டு முனைந்த சமூக சீர்திருத்தத் தந்தையே! உம் செயலாற்றும் திறம் கண்டு வியக்கின்றோம். வெற்றித் தலைவனே! உன் மணிவிழாக் கண்டு மகிழ்கிறோம் என வாழ்த்துகிறான் சீர்திருத்தவாதி.

நாட்டில் உண்மைக் கல்வியைப் பரப்ப எண்ணி, போதிக்கும் முறையில் புதுமை கண்டு, புனிதம்கொண்டு, நெஞ்சைக் கவரும் முறையில், கள்ளம் கபடம் அற்ற குழந்தைகட்குக் கல்வி புகட்டும் செல்வரே! தங்கள் மணிவிழா எங்களுக்கு ஓர் பொன் விழா என உள்ளம் பூரித்து உரைக்கிறான் கல்விவாதி.

அனைத்திற்கும் காரணம் என்ன? இலக்கியத் துறையிலே, அரசியல் துறையிலே, சமூகத் துறையிலே, கல்வித் துறையிலே இவையனைய பல துறைகளிலே முருகப்பா அவர்கள் பெற்றுள்ள திறமையும் செய்துள்ள சேவையுமே யாகும்.

ஆத்திரப் பேச்சையோ, அவசரச் செயலையோ, அறிஞன் என்ற ஆணவத்தையோ நாம் முருகப்பாவிடத்தில் காண முடியாது. அரசியலின் அனுபவம் காட்டும் கண்கள், இலக்கிய வாழ்வை எடுத்துக்காட்டும் முகம், அவை யரசர்கள் பாராட்டும் கலையரசன் என்பதைத் தெரிவிக்கும் மூக்கு, அமைதி, ஆணித்தரமான உறுதி படைத்த சொற்கள், எளிமை, இனிமை, இவற்றையே நாம் முருகப்பாவிடத்தில் காணலாம். சிந்தைக்கு இனியராய், வாய்க்கினியராய் விளங்கும் முருகப்பாவின் மணி விழாக் கண்டு நான் மட்டுமல்ல, நாட்டிலே உள்ள நன்றி உள்ளம் படைத்த ஒவ்வொருவனும் வாழ்த்துகிறான்; பல்லாண்டு பாடுகிறான். வீசும் தென்றல், பாயும் தேன் நம் நினைவிற்கு வருகின்றன.

புரட்சிப் பண்பாடி, போர் முழக்கம் செய்து, நாட்டின்போக்கை நல்வழிக்குக் கொண்டுவருவோம் என உணர்ச்

சிப் பெருக்கால் உரைக்கும் ஆயிரம் ஆயிரம் இளைஞர்களை, தம் அனுபவ உரையால், அறிவு உள்ளத்தால், அன்பு மொழியால் புது வழி கூறி, அறப் பண்பாடு செய்யும் பெருமை முருகப்பா அவர்கட்கு அமைந்த தனிப் பண்பாகும்.

இன்று நாட்டிலே பாட்டுக்கள் கட்டப்படுகின்றன, இயற்றப்படுகின்றன, செய்யப்படுகின்றன, ஆக்கப்படுகின்றன. ஆனல், பாரதி என்ன செய்தான்? பாட்டைப் பாடினன். ஆம், பாடுவதுதானே பாட்டு. கவிஞன் ஒரு நிகழ்ச்சியைக் காணுகிறன், உள்ளம் மகிழ்கிறன், உணர்ச்சியிலே உயிருள்ள வார்த்தைகள் ஒன்றன்பின் ஒன்ருக ஓடிவருகின்றன; அவைதாம் கவிதைகள்.

அஃதன்றிச் சொற்களைப் பல நாட்களுக்குச் சேர்த்து கருத்து விளக்கம் இன்றிப் பாடின், அது எப்படிக் கவிதையாக முடியும் என, கவிதையின் உண்மைத் தத்துவத்தை முருகப்பா அவர்கள் எடுத்துக் கூறும்பொழுது கேட்டு மகிழ்ந்த அன்பர்களிலே நானும் ஒருவன்.

பேச்சாளனின் பேசும் குரலிலே, எழுத்தாளனின் பேன முனையிலே, பாடகனின் பாடும் குரலிலே இன்றைய மணிவிழா இடம் பெறுகிறது. தமிழ் மக்களின் வழிகாட்டி; வளர் தமிழ் பரப்பும் வள்ளல்.

அண்ணல் முருகப்பா, அவர்தம் மனைவி மரகதவல்லி அம்மையார், நிலையாரும் புகழ் படைத்த அருமைத் தம்பி பாண்டியன், குடும்பத்தார் அனைவரும் வாழ்க! வாழ்க! வாழ்க! என வாழ்த்துகிறேன்.

## வாழ்க இனிது

### எண்சீர் விருத்தம்.

பல்வளஞ்சேர் காரைமா நகரந் தன்னில்
 பண்புநிறை தனவணிக இளைஞர்எல்லாம்
கல்வியறி வொடுசமுக தேச சேவை
 கடமையென ஆற்றக்கா ரணனுய் நின்ற
சொல்லரிய புகழ்நிறைந்த தலைவ னுகும்
 சொ.முருகப் பன்இனிது தொடங்கி [வைத்த
நல்லறிஞர் திகழ்ஹிந்து மதாபி மான
 நற்சங்கம் பல்லூழி வாழி வாழி.

### வெண்பா.

தேசுடனே மக்கள்குலம் சீர்திருந்த [வந்தஉயர்
நேசன் நகைததும்ப நின்றுநனி—பேசும்
அறுபதுநல் லாண்டுநிறை அண்ணல் [முருகப்பன்
இறையருளால் வாழ்க இனிது.

ராம. திருநாவுக்கரசு செட்டியார்.

## கைதொழுது ஏத்துவர்

### நிலைமண்டில ஆசிரியப்பா

*பல்வகை அறங்கள் வழுவா தியற்றும்*
*செட்டி நாட்டில் சீர்மிகு குடியில்*
*தோன்றி வளர்ந்த ஆன்ற அறிஞ!*
*முருகப் பாவெனும் முத்தமிழ் வள்ளால்!*
*இந்நாள் நுமக்கு இருமுப்பதாண்டு*
*நிறைதல் கேட்டு நீள்மகிழ் கொண்டேன்.*
*மகளிர் இல்லம் வாழ்த்தும்உன்னை!*
*சீரிய திருத்தம் செழுமை நல்கும்*
*பத்திரிகை உலகம் பரவியே போற்றும்*
*கைம்பெண் தோழியர் கைதொழு தேத்து [வர்*
*நானும் வாழ்த்துவன் நானிலம் புரக்க*
*நீடூழி வாழிய! நீடுவா ழியவே!*

நாஞ்சில். கா. கணபதி

# தென்னாட்டு "இராஜாராம் மோகன்ராய்"

**தமிழண்ணல்.**

சமூக சீர்திருத்தம் பேசுகின்ற பலர் இன்று வெறும் வாய்வீரர்களாகவே விளங்குவதையும், உலக வாழ்வில் புகும்போது கோழைகளாய், அந்தச் சீர்கெட்ட சமுதாய வாழ்விலே தாமும் உழன்று தவிப்பதையும் காண்கிறோம். ஆனால், இன்றைக்கு முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னர், செட்டிநாட்டிலே ஒருவர் சீர்திருத்தம் பேசினார். சீறியெழுந்த சமுதாயத்தின் முன்னர்த் தன் சீர்திருத்தைச் செயற்படுத்திக் காட்டி, இன்றைக்கு அதே சமுதாயம் தனக்குச் சிறப்புரை நல்க வாழ்கிறார். அவர்தான் அறுபான் ஆண்டு நிறைந்த இளைஞர் சொ. முருகப்பா!

ஆம், ஒரு காலத்தில் "கிராப்பு" வைத்துக்கொள்ள வேண்டும் என்று போராட்டம் நடந்தது! பெண்களை விலை கூறி விற்கவும், வாங்கவும் கூடாதென்று போராட்டம் நடந்தது! இன்னும் பாலிய மணம் கூடாது, உயிர்ப்பலி கூடாது, சாதி வேறுபாடு கூடாது, விதவைகளுக்கு மறுமணம் புரியவேண்டும் என்றெல்லாம் போராட்டம் நடந்தது. அத்துணைப் போராட்டங்களிலும் முன்னின்றார், பேசினார், செய்து காட்டினார்! அவர்தான் செட்டிநாட்டுச் சீர்திருத்தச் செம்மல், தென்னாட்டு "இராஜாராம் மோகன் ராய்" திரு. முருகப்பா!

"அண்ணாமலையார் துணை" என்று தான் கடிதங்களில் குறிப்பிட வேண்டும் என்று வைதீகர்கள் வாதாடிய போது "தபால்காரன் துணை" என்று எழுதினார். பத்திரிகையிலே 'பிள்ளையார் சுழி' போடவில்லையே என்று சிலர் மனம் நொந்தபோது, ஒரு நாள் தலையங்கம் முழுவதும் 'பிள்ளையார் சுழிகளையே' போட்டு நிரப்பி நொந்த மனத்தைச் சாந்தப்படுத்திக்கொள்ள வேண்டினார்! ஆம்; பழமையை வெறுத்துப் பயனற்றவைகளை ஒதுக்குவதிலோ, புதுமையைக் கற்றுப் பொன்னானவைகளைக் கைக்கொள்வதிலோ முருகப்பாவுக்கு இணை முருகப்பா தான்! அவரது வாழ்க்கை வரலாறு இந்நாட்டுச் சீர்திருத்த வரலாறு ஆகும்.

அறுபது ஆண்டு நிறைவுற்றது என்று கேட்டார் வியக்குமாறு, முப்பதே ஆண்டு மதிக்கத் தகுந்த முக மலர்ச்சி! இளைஞரும் வியக்க, ஏறு போல் பீடு நடைபோடும் மனஎழுச்சி! வழுக்கை முன் தெரியும் தலையும், பரந்த நெற்றியும் காட்டும் அறிவு முதிர்ச்சி! இவற்றோடு நல்ல உயரமும், கட்டான உடலும், அஞ்சாத நெஞ்சமும், கூரிய உணர்வும், எக் காரியத்தையும் சாதிக்கும் ஆற்றலும் கொண்டவர்தான் முருகப்பா. அவர் பேச்சு அவையோரை நகைச் சுவையிலே ஆழ்த்துவதாக இருக்கும். அவர் எழுத்துப் படிப்போர் உள்ளத்தைத் தொட்டுப்பேசிப் பண்படுத்தும். அவர் செயல், கோழைகளைத் திடுக்கிட வைக்கும். குறிக்கோள் கொண்டார்க்கு வழிகாட்டும்!

முத்தமிழ் வளரும் பாண்டி நாட்டுக்குச் சிறப்புத் தரப் பிறந்தோர் மூவர்.

ஒருவர் "நும்மோரன்ன செம்மலு முடைத்தே" என மன்னனை நோக்கிக் கூறிய மாபெரும் புலவர்போல, பெருமிதத் தோற்றங்கொண்ட 'தமிழ் ஐயா' ராய. சொ. மற்றவர் கம்பன் புகழ்பாடிக் கன்னித்தமிழ் வளர்க்கும் அன்பர், சா. கணேசன். மூன்றுருவ தான, மூவரிலே முதல்வரே, அறுபான் ஆண்டு நிறைந்த முருகப்பா. அவர்களுக்கு மணிவிழாக் காணுகின்றது சங்கம். தமிழகம் சிறக்க மூவரும் வாழ்க, முருகப்பா வாழ்க, என வாழ்த்துகின்றேன்.

---

## தெளிவான பேச்சு

தங்கள் சங்கத்தின் ஆதரவில் அன்பர். திரு. சொ. முருகப்பா அவர்களுக்கு ஒரு பாராட்டுச் செய்யவும், மலர் ஒன்று வெளியிடவும் நிச்சயித்திருப்பது தெரிந்து மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

அன்பர். முருகப்பா நேர்மையான உள்ளமும் தெளிவான பேச்சும் உடையவர். தோன்றுவதைத் தோன்றும்படியே சொல்வதில் நயப்பாடு இருக்கும். தம்முடைய விருப்பு வெறுப்பினால் ஒன்றை அளவுகடந்து புகழ்வதும் இகழ்வதும் அவரிடம் காண இயலாது. நூல்களில் அவர் நுழையும்போதும் நடுநிலையான முறையில் அவர் ஆராய்ச்சி செல்லும்.

கம்பன் திருநாளில் அவருடைய பேச்சை அனுபவித்தவர்கள் அவருடைய தெளிவான முறையையும், நயப்பாடான பேச்சமைப்பையும் நன்கு அறிவார்கள்.

அவர் இன்னும் பல்லாண்டு, பல்லாண்டு வாழ வேண்டுமென்று வாழ்த்துகிறேன்.

கி. வா. ஜகந்நாதன்.

## பண்பு கொண்டார்

---

உள்ளத்தால் அன்பானர்;
உயர்தமிழே அறிவானர்;
வெள்ளத்தால் அமிழாத
வெண்தாமரையொத்தார்;
கள்ளத்தால் நெருங்கொணுக்
காட்சித் தமிழினத்தின்
உள்ளத்தால் உணர்ச்சியால்
உருவான முருகப்பா.

உண்ணத் தெவிட்டாத
உயர்தமிழர் ஓவியங்கள்
எண்ணி இனிக்கின்ற
இன்பச் செழுந்தமிழை,
கண்ணின் இமைபோற்,
காத்திடுதல் வேண்டுமெனும்
அண்ணனுக்கு என்றன்
அன்புமிகும் வாழ்த்துக்கள்.

பைந்தமிழே உனைவளர்க்கும்
பண்பு கொண்டார்;
பாண்டியனைப் பெற்றுமனப்
பரிசும் கொண்டார்;
செந்தமிழில் அன்புநிறைந்து
உயர்ந்து வந்தால்,
செம்மைநிறை நல்வாழ்வு
கிட்டும் திண்ணம்.
விந்தியத்தின் அப்பாலும்
தமிழைக் காண்போம்;
விரிஉலகில் எங்கெங்கும்
உலவக் காண்போம்
சந்ததமும் தமிழ்பரப்பி
வாழ்வோம் நாமே
தரணிமுழு தானதமிழ்
ஆடல் காண்போம்.

வித்துவான். பெரி. சிவனடியார்

# சமூக சேவையும் தோழர் சொ. முருகப்பாவும்

**சு. பழநியப்பா.**

தேச சேவை, சமய சேவை, பாஷா சேவை, சமூக சேவை இந் நான்கில் முதன்மையாக, ஒவ்வொருவரிடமும் பிரதானமாயிருக்க வேண்டுவது சமூக சேவையே. "என் கடன் பணிசெய்து கிடப்பதே" என்ற பெரியார் ஆப்த வாக்குக்கு இலக்கான எனது அரிய தோழர் சொ. முருகப்பா அவர்களை 1917ம் ஆண்டு பர்மாவிலிருந்த சமயம் (பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்க ஆரம்பம்) நான் சமூக நலத் தொண்டில் முற்பட்டுள்ளபோது லிகித மூலமாகவும் "தனவைசிய ஊழியன்" பத்திரிகை, "சங்கம்" "பிரசாரம்" "தனவைசிய இளைஞர் சங்கம்" பின் "குமரன்" வார இதழ் மூலமாகவும் பின் நேரிலும் ஒத்துழைப்பிலும் அறிவேன்.

என்னுடன் ஒத்துழைத்த நண்பர் சிலரில் இவர்கள் ஓர் அரிய செயல் வீரர். நம் சமூகம், மற்றவர்களை யொப்ப, காலரீதியை ஒத்து, ஒற்றுமையாக மிக நல்ல நிலைமையில் டாம்பீகமின்றிச் சிக்கனமாக இருந்தும் நடந்தும் வரவேண்டு மென்பதே முக்ய குறிக்கோள்.

'தனவைசிய ஊழியன்' வார இதழ் ஆரம்பித்த காலத்து தோழர். சொ. முருகப்பா அவர்கள் எடுத்துக் கொண்ட ஊக்கமும் விடாமுயற்சியும் யாராலும் என்றும் மறக்கற்பால தன்று. தேவகோட்டையில் 1917க்கு முன் நடந்த "வைசிய மித்திரன்" வார இதழை நண்பர். இராமனுதன் செட்டியாரிடம் நான் "ஊழியன்" என்றபெயருடன் நடத்தக்கிரயத்துக் கேட்டபோது (லிகிதமூலம்) இளைஞர்கட்குக் கொடுக்கவே மறுத்ததோடு, இளைஞர் நோக்கத்தையும்,கொள்கைகளையும், வேலை செய்வதையுமே வெறுத்தார்." தனவைசிய ஊழியன்" சமூக நலத்துக்கென ஆரம்பித்துக் காரைக்குடியில் நடத்த முற்பட்ட போது, பணம் நன்கொடை வாங்க, அனுப்பிவைக்க, பர்மாவில் நானும் சிரத்தை எடுத்தேன். சிற்சில பேரபிமானிகள் நன்கு உதவினர். தோழர். சொ. முருகப்பா, பின் ஏற்படுத்தி நடத்தின "குமரன்" வார இதழ் 25 ஆண்டு நடந்து நின்று விட்டது. பத்திரிகை, பேச்சு, பிரசாரம் இருக்கும்போதே தனியாக வசதியுள்ள ஓர் இடம் வாங்கி அதில் மகளிர் இல்லம் ஏற்படுத்தி அதோடு மாண்டிசோரியும் இணைத்து இரண்டும் நீடித்து நடக்கத் தகுந்தபடி பண்டு சேர்த்து நடத்தி வருகிறார்கள். பேரபிமானிகள் பொருள் உதவியும் பெற்றனர். இதற்கான ஒத்துழைப்பாளராக, தோழி. மரகதவல்லியையும் தெரிந்தெடுத்து மணம் செய்துகொண்டனர். பிள்ளையும் கிடைத்தது. அப் பிள்ளையாகிய வீரபாண்டியனே வளர்ச்சியடைந்து, கல்வி கேள்வியாலும் மேதையாக வரக்கூடிய வழியிலும் தயாராகிறான்.

தோழர். சொ. முருகப்பா அவர்களிடம் உடல் உழைப்பைவிட ஊக்கம், விடாமுயற்சி, தைரியம், நுண்

ணறிவு, சமய சாதுர்யம், வினயம், பேச்சு வன்மை, அதிகமென்பதை யாரும் அறிவர். தோழர். சொ. முருகப்பா அவர்கட்கு அறுபதாண்டு நிறைவு பெறுவது பெரிதும் மகிழ்ச்சியே. அவர்களது மேற்பார்வையில் நடக்கும் ஸ்தாபனமான மகளிர் இல்லமும், மாண்டிசோரி பள்ளியும் இன்னும் தக்கார் உதவிபெற்று மேன்மையாகவும் வளர்ச்சியுடன் நடந்து வர வேணுமென மன மொழி மெய்களால் வேண்டிக்கொள்ளுகிறேன்.

---

## கணிசமான சேவை

காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்க ஸ்தாபகர் திரு. சொ. முருகப்பா அவர்களின் சஷ்டியப்த பூர்த்தி விழாவைக் கொண்டாடுவது சாலப் பொருத்தமுடையதாகும். ஸ்ரீ. முருகப்பா அவர்கள் இளமைப் பருவமுதலே பொதுப் பணிகளில் ஈடுபட்டுத் தொண்டாற்றி வந்திருப்பது நம் அனைவராலும் பாராட்டற் குரியதாகும். முக்கியமாக, சமூக ஆசார சீர்திருத்தத் துறையிலும் சிறுவர் சிறுமியர்க்குகந்த கல்வியைப்பயிற்றுவிக்கும் முயற்சியிலும் கணிசமான அளவு பயன்தரத்தக்க சேவைகள் புரிந்திருப்பதை இந்த சந்தர்ப்பத்தில் எடுத்துக்காட்டாகக் குறிப்பிட விரும்புகிறேன்.

ஸ்ரீ. முருகப்பா அவர்கள், இந்நில உலகில் நீண்ட ஆயுளும் உடல் நலமும் பெற்று வாழவும், நம் சுதந்திர இந்தியாவில் ஜனநாயகம் வளர்ந்தோங்குவதற்கு அரண் செய்யவல்ல ஜன சமுதாயம் உருவாவதற் குரிய பணிகள் பல புரிந்துவரவும் ஆண்டவன் அருள் பாலிப்பானாக.

பி. எஸ். குமாரசாமி ராஜா.

## எம் புலவ!

கம்பன் கவியமுதம்
காலமெலாம் யாம்பருக
அம்புவியில் நற்பதிப்பை
ஆய்ந்தளிக்கும்—எம்புலவ!
முத்தமிழ்ச் செல்வ
முருகப்ப வள்ளால்நீ
நித்தமும் வாழ்க நிலத்து!

மக்கள் குலந்தழைக்க
மாநிலத்தில் தம்பணியால்
தக்கவழி காட்டும்
தமிழறிஞ!—எக்காலும்
முந்தைமொழி போற்றும்
முருகப்ப மாமணியே!
சிந்தைவழி வாழியநின் சீர்!

கள்ளமிலா மக்கள்
களிகூர எந்நாளும்
உள்ளமருங் கல்வி
உரைத்துலகில் —தெள்ளுதமிழ்ப்
பாஉயர வாழும்
அமரா பதிஉடையாய்!
நாஉயர வாழிநீ நன்று!

நல்லோர் புகழ்ந்திடவே
நாடு மகிழ்ந்திடவே
பல்லோரும் ஏத்திநிதம்
பாடிடவே—எல்லோரும்
சாந்தி விழாக்காணச்
சங்கத்தார் போற்றுகிறார்;
ஏந்திநீ வாழ்க இனிது!

ரெ. முத்துக்கணேசன்.

# கவியினிப்புக் கண்ட கலைஞன்

வ. சுப. மாணிக்கம். எம். ஏ. எம். ஓ. எல்.

நாட்டுக்கு நல்லவன்;
நம்பும் புரட்சியன்;
பாட்டுக்கு இளகிய
பக்குவன்; - கூட்டுக்கு;
நண்பன் முருகப்பன்
நாம்வாழ வாழியரோ!
பண்பும் செயலும் பரந்து.

துன்பத் தமிழகத்துத்
தொண்டுகள் எத்துணையோ
அன்பன் முருகப்பன்
ஆற்றுகிறான் - இன்பக்
கவியினிப்புக் கண்ட
கலைஞன் தமிழச்
செவியினிக்க வாழ்க சிறந்து.

பெருமகன் முருகப்பா அவர்கள் மூன்றாண்டுகட்கு மேலாகக் கம்பர் இராமாயண வெளியீட்டில் ஈடுபட்டுள்ளனர். 'கம்பனுடைய காவியம் தெவிவான உருப்பெற வேண்டும்; மக்கள் யாவரும் அதன் பயனைப்பெற வேண்டும் என்பதுதான் எனது குறிக்கோள்' என்பது அவர்கள் பதிப்பின் நோக்கம். கதைக்கோவை விடாதபடி ஏறக்குறைய 4000 பாட்டுக்கள் கொண்ட ஓர் இராம காதையை அளிப்பது அவர்தம் அடிப்படை. சொற்பொருள், பொழிப்புரை, பாநயம் முதலான பகுதிகள் இப்பதிப்பில் உண்டு. பாலகாண்டம் விரைவில் வெளிவரும். இப் பெருவேலையை நினைவுகொண்டு, 'கம்பர் பதிப்பகம்' நிறுவியுள்ளனர். மேலும் தம் இராமகாதைப்பதிப்புக்குநாட்டை முன்பே பதப்படுத்தும் கருத்துக் கொண்டு, 'கம்பர் காவியம்' என அதன் சீரழிவெல்லாம் காட்டி, ஓர் ஆராய்ச்சி நூல் எழுதி விடுத்திருக்கின்றனர். இந் நன்மைகளின் உலகியல் அறிவையும் செயல் வன்மையையும் இக்குறிப்புக்கள் புலப்படுத்தும்.

"கம்பர் இராமாயணம் பாட பேதத்துக்குப் பெயர் போனது. அதன் காவியச் சுவையில் ஈடுபடப் புதிய பாட பேதங்கள் செய்தால் என்ன என்று ஒரு புலமையுணர்ச்சி யார்க்கும் தோன்றுகிறது. எப்படியோ கம்பராமாயண ஏடு கனத்து வந்திருக்கிறது" என, சொ. முரு. அவர்கள் கலங்கி உருகி நயம்பட எழுதியுள்ளனர். இந்நிலையில், வரம்பு கொள்ளாது இராமாயணம் பதிப்பிக்கப்படுவது, மேலும் அப்பெருந் தமிழ்க் காவியத்தைக் கெடுப்பதாய் முடியும். ஆதலின் இப்பதிப்பாளர் முதற்கண்ணேயே கொண்ட வரம்பு என்ன? "இதுவரை ஏட்டில் வந்த பாட பேதங்களுள் சிறந்த ஒன்றைத் தழுவுவது; நன்றாக இருக்கும் என்பதற்காகப் புதுப் பாடம் கற்பிப்பதில்லை'. இச் செம்மல் ஐயமின்றிக் கடைப்பிடிக்கும் இவ் வரம்பு பாராட்டுதற்கு உரியது. இந்த அறம் பொதுவாகவே தமிழ் வளர்ச்சிக்கு இன்று கட்டாயம் வேண்டுவது.

முரு. அவர்கள் கொள்கை யழுத்தம் உடையவர்; அதனோடு பிறர் கொள்கைக்குச் செவி சாய்ப்பவர். காரணத்தோடு கூறின், ஏற்றுக் கொள்ளும் பெருமை வாய்ந்தவர்.

"ஆராய்ந்து பாருங்கள்; அறியாமை எல்லாருக்கும் பொது. அறிவும் ஆராய்ச்சியும் எல்லாருக்கும் பொது. என்னுடைய இந்த முயற்சியும் பொதுவேயாகும்" என்பது 'கம்பர் காவிய' முகவுரை. புரட்சிவாய்ந்த முருகப்பாவின் நெஞ்சம் எத்துணைப் பணிவுடையது; நேர்மையுடையது; இனிமை செறிந்தது என்பதனை இம் முகவுரை காட்டும்.

அறுபதாண்டு நிரம்பும் இத்தமிழ்ப் பெருமகன் உள்ளத்தில் இளமைக் கொழுந்து ஓடுகின்றது. நடையிலும் செயலிலும் இளமை முறுக்கு நிற்கின்றது. முருகன் என்னும் பெயரைப் பெற்றோர் இடுகுறியாக வைத்திருந்தாலும், அவர்கள் 'குமரன்' தம் புத்துணர்ச்சியால் காரணப் பெயராக்கிக் கொண்டார். முருகனார் வாழ்க! அவர்தம் குடும்பம் வாழ்க!

---

## அருமை நண்பர்

முருகப்பா என்னுடைய அருமை நண்பர். அவருடைய பொதுப் பணிகளைத் தொடர்ந்து நான் கவனித்து வருகிறேன். அவர் பெற்றுவரும் வெற்றியின் ரகசியம் எனக்கு நன்கு தெரியும். உழைப்பின் உருவமாக விளங்குகிறார். அவர் 'ஆக்கம் அதர் வினய்ச் செல்லும் அசைவிலா ஊக்கம் உடையான் உழை' என்னும் திருக்குறளுக்கு எடுத்துக் காட்டாக இலங்குகிறார். முருகப்பா அவர்களின் அறுபதாம் ஆண்டு நிறைவு விழா, சிறப்புடன் நடைபெற வாழ்த்துகிறேன். முருகப்பா இன்னும் பல்லாண்டு வாழ்ந்து தம் பொதுப் பணியைச் சிறப்புறச் செய்ய வேண்டுமென்பதே என் ஆசை வாழ்த்து.

அ. பழநியப்பன்.

## சிந்தனை உழவன்

வாழ்த்துதும் பெரிதே;
வாழ்த்துதும் பெரிதே!
ஏழ்கடல் வைப்பினும்
தன்மணம் வீசிச்
சூழ்புகழ் பரப்பும்
தொன்மொழி யருளால்
வாழ்த்துதும் பெரிதே!
வாழ்த்துதும் பெரிதே!
குறிஞ்சிக் கிழவன்
குமரனை யீன்ற
நறுந்தமிழ்க் காரை
நன்னகர்த் தோன்றிப்
பொற்கொடி, மரகதப்
பொற்புறு வல்லியார்
நற்றுணை நாடி
நல்லறம் பேணி
மற்போர்ப் பாண்டி
மைந்தனைப் பெற்ற
சொற்சோர் வில்லாச்
சொ - முரு கப்பன்!
நுண்மாண் நுழைபுலம்
நால்நீர் பாய்ச்சிக்
கண்டோர் கேட்டோர்
கருத்தெலாம் இனிக்கச்
செந்தமிழ் விளைத்த
சிந்தனை உழவன்!
சந்தமார் பாரதி
வந்துபா ராட்டிய
இந்து மதாபி
மான சங்கம்
தந்தநற் குரிசில்!
தண்டமிழ்க் கலைஞன்!
பொன்மழைத் துளியினும்
வாழ்நாள் பெற்றுத்
தென்மொழி மந்திரத்
திருக்குறள் போல
வாழியர் நன்று!
வாழிபல் லாண்டென
வாழ்த்துதும் பெரிதே!
வாழ்த்துதும் பெரிதே!

பூ. அமிர்தலிங்கன்.

# குமரன் தொண்டு

செல்லூர்க்கிழார். செ ரெ. இராமசாமிப் பிள்ளை.

'தோன்றிற் புகழொடு தோன்றுக; அஃதிலார் தோன்றலின் தோன்றாமை நன்று' என்பது வள்ளுவர் வாய்மொழி. உலகில் மக்கள் பிறப்பதும், வளர்வதும், மணங்கொண்டு இல்லற வாழ்க்கை நிகழ்த்துதலும், மக்களைப் பெறுதலும், பொருளீட்டலும் பிறவும் மக்ளிடைப் பொதுவாகக் காணப் பெறுஞ் செயலாகும். இந்நிலையைக் கடந்து பொது வாழ்க்கையில் ஈடுபடல் அரியவற்றுளெல்லாம் அரிதாதாகும். இஃது எல்லோருக்கும் கிட்டுவது மன்று. இப்பொது வாழ்வென்பது தமக்கென வாழப் பிறர்க்குரியாளராய் வாழும் கெழுதகை அன்பாகும். இச்சீரிய செயலுக்கு இலக்காக ஒருசிலரைத்தான் காண்கின்றோம். அச் சிலருள், ஒருவராக இதோ நம்கண்முன் இளமை தவழும் புன்முறுவலுடனும், அன்பொழுகும் கண்ணுடனும், மலர்ந்த முகப்பொலிவுடனும் உள்ள உரனும் உடலுரனும் குன்றாது இளந் தோற்றத்துடனும் காணப்படுகின்றாரே இவரும் ஒருவராவர். இந் நல்லாரே திரு. சொ. முருகப்பா என்னும் செம்மை சான்ற சீர்மையாளர். இவர்கட்கு அறுபான் ஆண்டு இன்று நிறைவுறுகின்றது. அவ்விழாவை இன்று மனமகிழ்வுடன் நாம் கொண்டாடுகின்றோம்.

இவர்கள் 'குமரன்' என்னும் பெயரால் கிழமை இதழ் ஒன்றைத் துவங்கி நடாத்தி அவ்விதழ் தமிழ்நாடெங்கணும், தமிழர் வாழும் கடல்கடந்த நாடுகளிலெல்லாம் சென்றுலாவித் தமிழ்மொழிக்குச் செய்த தொண்டு உலகு அறிந்த ஒன்று. இவர்கள் 'குமரன்' ஆசிரியராக அமர்ந்து மக்கட் சீர்திருத்தம், மூடப்பழக்க வழக்கங்கள் ஒழிப்பு, நாட்டுக்கு உரிமை நல்கும் கிளர்ச்சி, விதவாவிவாகம் முதலிய நல்ல துறைகள் பலவற்றிற்கும் ஆற்றிய தொண்டு அளப்பரியன. விதவா விவாகச் சீர்திருத்தில் தலைநின்று சொற்பொழிவு வாயிலாகவும் எழுத்துக் கருத்துரை வாயிலாகவும் நாட்டில் புத்துணர்ச்சி யூட்டியதோடமையாது தாமே சீர்திருத்த முறையில்-கலப்புமண முறையில் திருமதி. மரகதவல்லி அம்மையாரவர்களை மணந்து இந் நன்முறையை ஏனையோரும் பின்பற்ற வழிகோலினார்கள்.

இத்தகைய செயற்கரிய செய்த செய்கின்ற செய்யும் பெரியாரவர்கட்கு இன்று அறுபான் அகவை நிரம்புறுகின்றது. அஃதறிந்து என் மனம் களிதுளும்புகின்றது. நெடுந் தொலையில் வாழினும் என் மனம் எவ்வூர்தியிலும் சேராது பறந்து சென்று இம் மணிவிழாவிற் கலந்துள்ளது. காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கம் இவ் விழாவைச் சிறப்புற நடத்தித் திரு. சொ. முருகப்பா அவர்களின் புகழைத் தம் புகழாக ஆக்கிக்கொண்டது. அப்பேறு இச் சங்கத்தார்க்கே கிட்டிற்று. இச் செயல் பாராட்டற் குரியது.

வாழிய முருகப்பர் மனைவி மக்களுடன்

வாழிய அன்னார் வண்புகழ் வளர்ந்தே.

# வாழ்த்துகிறார்

**முடியரசன்.**

1 பின்னணியில் நின்றவொரு
சமுதா யத்தைப்
பிறரோடு சமமாகக்
கொணர்வான் வேண்டி,
முன்னணியில் நின்றமையால்
வெற்றி கொண்டான்;
முற்போக்குக் கொள்கைகளை
முரசங் கொட்டிச்
சொன்னபடி வாழ்க்கையினும்
செய்து காட்டிச்
சுயநலத்தார் வகுத்தமைத்த
சாதிச் சூழ்ச்சி
பின்னடையச் செய்தானென்
றிளைஞர் எல்லாம்
பெருமகிழ்வால் வாழ்த்துகிறார்
வாழ்க என்றே.

2 பெண்ணினத்தை அச்சுறுத்தி
விதவை என்ற
பெருங்கொடுமை வழக்கத்தைப்
பழக்க மாக்கிக்
கண்விழித்துப் பாராமல்
தாழ்த்தி வந்தோம்.
கண்சிவக்க மனம்பதறத்
துடித்தெ ழுந்தான்;
எண்ணியிங்கு மறுமணத்துக்
கழகம் கண்டான்;
எத்தனையோ மகளிர்க்கு
வாழ்வு தந்து,
கண்ணிரங்கும் நீர்துடைத்தான்;
ஆத லால்அக்
காரிகையார் வாழ்த்துகிறார்
வாழ்க என்றே.

3 நகைமுகத்தன்; இன்சொல்லன்;
குறைகள் காணின்
நாகரிக வன்சொல்லன்;
தமிழிற் பாடாப்
பகையுளத்தார் நாணும்வகை
பேசும் ஆற்றல்
படைத்தவன்;நம் தமிழிசையே
தமிழ நாட்டில்
மிகைபடத்தான் பணிபுரிந்தான்;
சமயப் பேரால் [தொதுங்கச்
மிகைசெய்தோர் மறைந்
செய்தான்; நல்ல
தகையுளத்தான்; சீர்திருத்த
நோக்கங் கொண்டான்;
ஆதலினல் தமிழரெலாம்
வாழ்த்து கின்ருர்.

4 கம்பன் புகன்றதெனக்
கட்டுரைத்த பாக்கடலுள்
நம்பிக் குளித்து
நலங்கண்டான்—அம்புவிக்கு
முத்தெடுத்துக் கோத்து
முழுநூலில் தந்திட்டான்
நத்துதமிழ்ப் பாவை நயந்து.

5 முத்தெடுக்க மூழ்கி
முருகப்பா பட்டதுயர்
தித்திக்கும் செந்தமிழே
தேர்ந்துணரும்—வைத்திருந்த
தஞ்சைமன்னன் ஏடுரைக்கும்;
தக்கபுல வோர்குழுவின்
நெஞ்சுரைக்கும்;இவ்வுலகில்நின்று

6 ஆண்டறுப தானலும்
அன்றேபோல் இன்றளவும்
காண்டகுநல் தோற்றத்தன்
காசினியில்—மீண்டும்பல்
ஆண்டாண்டு வாழ்ந்திடுக
அன்பன் முருகப்பன்
ஈண்டும் புகழோ டிருந்து.

## மகளிர் இல்லத்தில் பள்ளிக்கூடத் திறப்புவிழா.



ஸ்ரீலஸ்ரீ. சுவாமி விபுலாநந்தா அவர்கள் (30 - 8 - 39) திறந்து வைத்தார்கள்.

## காரைச் சிவனடியார் திருக்கூட்டம்



(1923)

இடமிருந்து வலம்: வித்துவான். அரு. சோமசுந்தரம், அழ. அருணாசலன், சேவு. மெய்யப்பன், சொ. முருகப்பா, முத்த. வெ. சொக்கலிங்கன், மு. அருணாசலன்.

# "கோசுவலைக்குள் பெண்கள்"

*நீலாவதி அம்மையார்.*

சீர்திருத்தம் என்றால் அன்பர் முருகப்பா அவர்களை நினைக்காமல் இருக்க முடியாது. அன்று நாட்டிலே எங்கும் சீர்திருத்தக் காற்று வீச ஆரம்பித்தது. அந்தக் காற்றை வேகமாக்கிக் காரியத்திலும் காட்டிய வீரர்களில் முருகப்பா அவர்களே முதன்மையானவர்.

செட்டிநாட்டை ஓர் அழகிய பூஞ்சோலையாக்கி, அந்த அழகைக் கண்டு களிக்க அரும்பாடுபட்டவர். பெண் கல்வியோ, பெண் உரிமையோ, சமூக சீர்திருத்தமோ, இன்று பேசவேண்டிய அவசியம் இல்லாமலாகிவிட்டது என்றுகூடச் சொல்லலாம். அன்று அப்படி அல்ல. பெண்கள் கொசுவலைக்குள் இருந்து பிரசங்கம் கேட்டார்கள். ஆண்கள் அந்த ஏற்பாட்டை துணிந்து செய்து அவர்களுக்குத் துணை புரிந்தார்கள் என்றால், அந்த நாளின் படுபாதாள நிலையை விவரிக்கவே வேண்டாமல்லவா? அத்தகைய ஒரு நாட்டைச் சீர்திருத்தம் செய்யச் சாதாரணத் துணிவு போதுமா? பொதுவாக எந்த மாறுதலைச் செய்ய முற்பட்டாலும், முதலில் வேண்டுவது அஞ்சாமை; அதிலும், சமூக விஷயத்தில் செய்யும் மாறுதல் இருக்கிறதே அதற்கு மட்டும் நெஞ்சு இரும்பால் ஆனதாக இருக்க வேண்டும். அந்த இரும்பு நெஞ்சு படைத்தவர் நம் முருகப்பா அவர்கள். போரில் எதிரிகளோடு நேருக்கு நேர் நின்று போர் செய்வதுகூட எளிது. சமூக விஷயத்தில் வேலை செய்யும் அன்பர்களுக்கு, சமூகப் பெரியார்களிடமிருந்தும் பொதுமக்களிடமிருந்தும், வரும் தாக்குதல்கள் அப்படி அல்ல. எந்த நிமிஷத்திலும், எங்கிருந்தோ, எந்த ரூபத்திலோ திடீரென்று தாக்கும். அதையெல்லாம் கண்டு மனம் இடிந்து இற்றுவிடாமல் இருப்பவர்களே வெற்றிச் சிகரத்தை அடைவார்கள். அத்தகைய வெற்றி வீரர் நம் முருகப்பா. தம் கூரிய அறிவால் ஆராய்ந்து அச்சமின்றி நிமிர்ந்து நடப்பார். அந்த நடை சொல்லும் அவரின் அஞ்சாமையை. இன்று செட்டிமார் நாட்டில் சீர்திருத்த முற்போக்குடன் நிமிர்ந்து நடக்கும், ஒவ்வொரு இளைஞரும், சகோதரிகளும் அன்பர் முருகப்பா அவர்களுக்கு முதல் வணக்கம் செலுத்தியே ஆகவேண்டும்.

சுமார் முப்பது ஆண்டுகளுக்குமுன் தனவணிக சமூகத்தில் பேசப்பட்ட சீர்திருத்தங்கள் ஒன்றா? இரண்டா? கல்யாண விஷயம் முதல் காய்கறி விஷயம்வரை, சீர்திருத்தம்தான் பேச வேண்டியிருந்தது. எழுத்தாலும் பேச்சாலும், வேண்டாத காரியங்களை அஞ்சா நெஞ்சுடன் வெட்டி வீழ்த்தினர். இன்று சிலர் நினைக்கலாம். 'இப்படிச் சண்டப்பிரசண்டம் செய்த சீர்திருத்தம் எந்த அளவில் பயன் தந்திருக்கிறது?' என்று. அதற்குச் சொல்லும் ஒரே பதில், அவர்கள் கணக்குத் தப்பு என்பதுதான். இரவும் பகலும் இடைவிடாது உழைத்தது வீணாகவில்லை.

விதையே போடமுடியாத நிலத்தில் விதை ஊன்றி முளைத்து மரமாகி

வருகிறது என்றால், நல்ல பலன் என்றுதானே சொல்ல வேண்டும்? வாழ்நாள் பூராவும் இப்படி நற்பயன்களைக் காணவே அன்பர் முருகப்பா ஆசைகொண்டார். நான் அறிந்த அன்றுமுதல் இன்றுவரை ஊக்கத்திலோ, உற்சாகத்திலோ, ஒரு டிகிரி கூடக் குறைய வில்லை.

நாட்டுப் பற்றும், தமிழ்ப் பற்றும், இலக்கியப் பற்றும் மிகுந்து நற்பணிக்கே நாட்களைச் செலவிட முனைந்த முருகப்பா அவர்களைப் பெற்ற நாடு பாக்கியம் செய்ததே ஆகும். அவர்கள் தொண்டிலே பரிபூரண பங்கைச் செலுத்தி உழைக்கும் அருமைத் துணைவியார் திருமதி. மரகதவல்லி அம்மையார் பாராட்டுக்குரியவர். அவர்களின் உற்சாகமும் ஒத்துழைப்பும் இன்றேல், "மகளிர் இல்லம்" என்ற அழகிய ஸ்தாபனம் தோன்றியே இருக்காது. மற்ற பணிகளும் வெற்றி பெற்றிருக்கமுடியாது.

அன்பர் முருகப்பா அவர்களும் மரகதவல்லியாரும் இந்த அறுபதாம் ஆண்டுவிழாவிற்குப் பின்னரும் பல நற்பணிகள் புரிந்து, மக்கள் சேவையில் மகிழ்ந்து நீடுழி வாழ இறை அருள் புரிக!

---

## தமிழின் செல்வர்!

முழுதுணர்ந்த பெருமகனார்!
அஞ்சா நெஞ்சர்!
முருகப்பர்க் காண்டறுப
தென்றூர் என்தன்
விழுமியநல் லாசிரியர்
தமிழுண் ணல்யான்
வியப்புற்றேன்! விள்ளரிதாம்
மகிழ்ச்சி கொண்டேன்!
முழுநிலவு முகிற்கூட்டம்
தனைக்கி ழித்து
முறுவலினைக் காட்டுதல்போல்
இலக்கி யத்தே
எழுந்தொளிரும் தீந்தமிழின்
செல்வர்! நல்லார்!
இனிமைதரும் முருகப்பர்
வாழி! வாழி! 1

உள்ளத்தைத் தூய்மையெனும்
புனலி லாட்டி
உரைக்கின்ற பேச்செல்லாம்
செயலிற் காட்டித்
தெள்ளமுதத் தமிழ்நூற்கள்
அனைத்தும் கற்றுச்
சீர்திருத்த விடிவானில்
வெள்ளி யாக
விள்ளரிதாம் புகழுற்று
வெற்றி பெற்று
விளங்குகிறார்! துணையற்ற
இளஞ்சி றார்க்குப்
பள்ளியொன்றை அமைத்திந்நாள்
கல்வி யூட்டும்
பாங்குடையர் முருகப்பர்
வாழி! வாழி! 2

செந்நிறஞ்சேர் மலரிடையே
மகரந் தம்போல்
செவ்வானத் தெழுந்தொளிரும்
கதிர வன்போல்
மின்னுகிறார் முருகப்பர்
தமிழ்நன் னாட்டில்!
மேன்மைகொளும் நல்லறிவு!
நேர்மை வாழ்வு!
கன்னலென இனிமைதரும்
பேச்சு! முற்றும்
கற்றறிந்த புலமைகொளும்
திறமை நெஞ்சு!
கன்னியெழிற் றமிழணங்கோடு
உறவு கொள்ளும்
கலைப்பண்பார் முருகப்பர்
வாழி! வாழி! 3

சுப. இளங்கோவன்.

# இராம காதையின் பதிப்பாசிரியர்

வித்துவான். என். சுப்பு ரெட்டியார், M. A., B. Sc., L. T.

சுமார் இருபது ஆண்டுகட்கு முன்னர் நான், திருச்சியில் கல்லூரியில் பயின்றபோது நானும் எனது நண்பர் வழக்கறிஞர் பா. அரங்கசாமி ரெட்டியாரும் (இப்போது திருச்சி மாவட்டத்தில் துறையூர் தொகுதிக்கு சென்னை சட்டசபை உறுப்பினராக இருப்பவர்) காரைக்குடியிலிருந்து வெளிவந்த 'குமரன்' என்ற பத்திரிகையைத் தொடர்ந்து படிப்பதுண்டு. விறுவிறுப்பான நடையில் நல்ல தமிழில் வைதீகர்களால் செரிக்க முடியாத கருத்துக்கள், சீர்திருத்த உள்ளங்களுக்கு ஏற்ற விருந்து, சமூகத்தில் நடைபெற்ற — நடைபெற்றுவரும் — கொடுமைகள், ஆகியவை அப் பத்திரிகையில் கிடைத்தன. அப் பத்திரிகையைப் படிக்கும்போதெல்லாம் சொ. முருகப்பா அவர்கள் எழுதின கட்டுரைகள் எனது மனத்தை கவர்ந்தன. நான் திருச்சியிலிருந்த ஐந்தாண்டுகளிலும் கட்டுரைகளின் ஆசிரியரும் மேற்படி 'குமரன்' பத்திரிகையின் ஆசிரியருமான சொ. முருகப்பா அவர்களைப் பார்க்க விழைந்ததுண்டு; வாய்ப்பு கிடைக்கவில்லை. ஆனால், அவற்றை எழுதி வந்த ஆசிரியரைப்பற்றிய ஒரு எண்ணம், ஏதோ ஒரு கற்பனை உருவம், எனது மனதில் பதிந்திருந்தது. நாளடைவில் எல்லாவற்றையும் மறந்துவிட்டேன்.

* * * *

விசாலமான நெற்றி, அறிவுப் பொலிவு பாய்ச்சும் கண்கள், கம்பீரமான தோற்றம், இனிய புன்முறுவல் தவழ்ந்த முகம், நடையிலும் பேச்சிலும் அடக்கம், தேவையளவு வளர்ந்துள்ள உயரம், இடுப்பில் நான்கு முழக் கதர் வேட்டியுடனும், காலர் இல்லாத அரைக் கைக் கதர் சட்டையுடனும், அதன் மீது ஒரு மூன்று முழத் துண்டுடனும் "மகளிர் இல்லத்தில்" அங்குமிங்கும் நடமாடிக்கொண்டிருந்ததைக் கண்டேன். இது 1949ம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நடைபெற்ற நிகழ்ச்சி.

அந்த ஆண்டில்தான் இதே சந்தர்ப்பத்தில் முதன் முதலாகக் காரைக்குடி சா. கணேசன் அவர்களைக் கண்டது. "காரைக்குடியில் நடைபெற்று வரும் கம்பன் திருநாளைக் காணுங்கள்" என்று எனது நண்பர், உழுவலன்பர் K. S. முத்துவேல் பிள்ளை அவர்கள் (இப்போது துறையூரில் சிலோன்லேபர் கமிஷன் ஏஜண்டாகப் பணியாற்றி வருபவர்) என்னைக் காரைக்குடிக்கு ஆற்றுப் படுத்தியதுடன், துறையூரிலிருந்து திருச்சி வரையிலும் இட்டுவந்து புகை வண்டியிலும் ஏற்றிவிட்டார்கள். மகளிர் இல்ல ஆண்டு விழாவைக் காணச் சென்றேன். அப்போது தான் மேற்கூறிய இலக்கணம் அமைந்த உருவத்தைக் கண்டது. அமைதியுடன் விழாக் கொட்டகையில் அமர்ந்து விழா நிகழ்ச்சிகளைக் கவனித்தேன். இல்லத்துக் குழந்தையின் ஆடல்களையும் பாடல்களை

யும் கண்டும் கேட்டும் அனுபவித்துக் கொண்டிருந்தபோது,

**இன்பக் கதைகளெல்லாம்—உன்னைப்போல் ஏடுகள் சொல்வ துண்டோ?**

என்ற பாரதியாரின் 'குழந்தை தத்துவம்' எனக்கு விளக்கம் ஆயிற்று. இவற்றை யெல்லாம் சிறு குழந்தைகளிடத்தில் நல்ல முறையில் மலர்வித்துவரும் 'மகளிர் இல்லத்து அண்ணுவின்' நிர்வாகத் திறமையைக் கண்டு மகிழ்ந்தேன். குழந்தைகளிடம் அவர் பழகும் போதெல்லாம் 'பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப் பரிந்து' நடப்பதைக் கண்டு கழிபேருவகை யடைந்தேன்.

1950-ம் ஆண்டு ஜுலை மாதத்திலிருந்து காரைக்குடியில் பணியாற்றும் வாய்ப்பு கிடைத்தது; கம்ப ராமாயணத்துடன் நன்கு பழகும் வாய்ப்புக்களும் கிட்டின. செட்டிநாடென்ருல் பணம் பெருத்த நாடு என்று பிற பகுதியிலுள்ள மக்கள் எண்ணிக் கொண்டிருக்கிருர்கள். பணம் மட்டுமல்ல, தமிழும் அங்கு பெருத்திருக்கிறது என்பதை இங்கு வந்த பிறகுதான் நேரில் கண்டேன். புலமை நலஞ்சான்ற புலவர் மணி. மு. கதிரேசச் செட்டியார், தமிழே வடிவெடுத்து வந்தாற் போன்ற ராய. சொக்கலிங்கன் போன்ற தமிழ்ச் செல்வர்களைத் தவிர, பல நல்ல தமிழ்ப் பெரியோர்களும், தமிழைப் பேணிவளர்ப்பவர்களும், தமிழ் அபிமானிகளும் இருக்கிருர்கள். செட்டிநாட்டு இளைஞர்களிடையே நல்ல தமிழ்ப்பற்று ஏற்படுவதற்கு சொ. முருகப்பா அவர்களும் ராய. சொக்கலிங்கன் அவர்களுமே காரணம் என்று சொன்னல் அது எள்ளளவும் மிகையாகாது.

மகளிர் இல்லத்துக்குச் செல்லும் போதும், இலக்கிய கூட்டங்களிலும் வேறு சந்தர்ப்பங்களிலும் நண்பர் சொ. முருகப்பாவிடம் நன்கு பழகும் வாய்ப்புக்கள் கிட்டின. எதைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தாலும் கடைசியில் அவர் பேச்சு இராமாயணத்திலேயே வந்து முடியும். அப்போதெல்லாம் கம்பராமாயணத்தைப் பற்றிய பல குறிப்புக்கள் சொல்லுவார்கள்; கேட்போர் அதைச் சாதாரணமாகக் கேட்டுச் செல்வார்கள்; 'அவர் ஒரு அறிஞர்' என்ற எண்ணம் அவர்கள் மனதில் எழாது; அவ்வளவு அடக்கமாகப் பேசிவிடுவார்கள் முருகப்பா அவர்கள். என் மனத்தில் மட்டிலும் அவர் 'ஓர் அபூர்வமான மனிதர்' என்ற எண்ணம் அடிக்கடி எழுவதுண்டு. நெருங்கிப் பழகப் பழக அவரைப் பற்றிய பல செய்திகள் தெரிய வந்தன.

சென்ற ஆண்டில் (1952 மேமீ) ஒருநாள் "மகளிர் இல்லத்தில் கம்ப ராமாயணம் பார்க்கலாம் வாருங்கள்!" என்று என்னை அழைத்தார்கள். பல புலவர்களும், அறிஞர்களும், தமிழபிமானிகளும், தமிழிலக்கிய ரசிகர்களும் வந்திருந்தார்கள். தமிழே வந்ததுபோல் ராய. சொ. வந்திருந்தார்கள். எங்கும் நடப்பதுபோல், இராமாயணத்தை ஒவ்வொரு பாடலாகப் படித்து நயம் காண்பார்கள் என்று நினைத்தேன். அதுவும் நடந்தது; வேறு செயல்களும் நடைபெற்றன. ஏற்கனவே கம்ப ராமாயணத்தில் சொ. முருகப்பா அவர்கள் செய்துள்ள வேலையின் அளவை 'பருப்பொருள் வடிவில்' காண நேர்ந்தது. உண்மையாகச் சொன்னல் 'ஒரு இராட்சச வேலை'யைச் செய்திருந்தார்கள் என்றுதான் சொல்லவேண்டும். ஒரு பல்கலைக் கழகம் செய்யக் கூடிய வேலையைத் தான் ஒருவராகச் செய்திருந்தது எனக்குத் திகைப்பையும் வியப்பையும் உண்டாக்கிற்று.

எங்களுக்கு முன்னல் ஒரு பெரிய பைல் (File) குவியல் இருந்தது. அதனுள் கம்ப ராமாயணம் இருந்தது! கம்பராமாயணத்தி லுள்ள, தான் பொறுக்கி எடுத்த பாடல்கள் தனித் தனியாக அவற்றிற் கெனத் தயாரிக்கப் பெற்ற காகிதத்தில் எழுதப் பெற்றுக் காண்டம் காண்டமாக, படலம் படலமாக வரிசை தவருது வைக்கப் பெற்றிருந்தன. ஒவ்வொரு காண்டத்திற்கும் ஒரு பைல். ஒவ்வொரு பாடலிலும் பாடபேதங்கள் குறிக்கப் பெற்றிருந்தன. இதுகாறும் அச்சில் வெளி வந்துள்ள எல்லாப் பிரதிகளையும் பார்த்து, அவற்றிலுள்ள பாடங்களில் சிறந்த பாடங்களெனத் தான் கருதியவற்றைப் பாடலில் குறித்திருப்பதாக நண்பர் முருகப்பா அவர்கள் கூறினர்கள்.

அந்த பைலிலுள்ள பாடல்களை நாங்கள் ஒவ்வொன்ருக ஆராய்ந்தோம். இசையறிவுள்ள ஒருவர் பாட்டை இனிமையாகப் பாடுவார். எல்லோரும் பாட்டை நன்ருகச் சுவைப்போம். பிறகு பாடபேத ஆராய்ச்சி நடைபெறும். நாங்கள் நல்ல பாடம் என்று முடிவு கட்டுவதை தேர்ந்தெடுத்த பாடல்களில் குறிப்பார்கள் முருகப்பா அவர்கள். பிறகு தேர்ந்தெடுக்காது விடுபட்ட பாடல்களும் விடாது படிக்கப்பெறும். எல்லோருக்கும் 'எது பாட்டு'? என்பது அப்போது நன்ருகப் புலப்படும். செருகு கவிகள் தெளிவாகப் பிறந்த மேனியாகக் காட்சியளிக்கும். "இவ்வளவு காலமாக நூலில் குடியேறி இருந்தது போதும்; தயவு செய்து போய்வாருங்கள்!" என்று அவற்றிற்கு விடைகொடுக்கப் பெறும். எப்படி எப்படி செருகு கவிகள் நூலில் வந்திருக்கக் கூடும் என்பதைப் பற்றிய அபிப்பிராயங்களை அங்கிருந்தவர் மாறிமாறி வழங்குவார்கள். ஆனல், முருகப்பா அவர்கள் கூறும் கருத்துக்கள் எங்களையெல்லாம் வயிறு வெடிக்கும்படி சிரிக்கவைக்கும்; விழுந்து விழுந்து சிரிப்போம். எத்தனையோ கட்டங்களைக் கலந்து அனுபவித்தோம்; அவற்றை யெல்லாம் சொல்லுவதற்கு இது இடமல்ல; சில சமயம் ராய. சொ. அவர்கள் நகைச் சுவையாக ஒரு விஷயத்தைச் சொல்லி, எடுத்துவைக்கப் பெற்ற பாடல்களிலிருந்தும் பல பாடல்களை நீக்குவதும் விட்ட பாடல்களில் சிலவற்றைச் சேர்ப்பதும் உண்டு. காவியத்திலுள்ள நிகழ்ச்சிகளின் சந்தர்ப்பங்களையொட்டி அவற்றை எல்லோரும் ஒருமுகமான அபிப்பிராயங்களாகக் கொள்வதைத்தவிர வேறுவழியே இல்லை; திரு. ராய. சொ. அவர்களின் கருத்து அவ்வளவு தூரம் முடிந்த முடிபாக இருந்தது.

இந்தக் கம்பராமாயண ஆராய்ச்சி சில சமயம் காரைக்குடியில் புதுமைப் பதிப்பகம் அ. லெ. நடராஜன் அவர்கள் வீட்டிலும் நடப்பதுண்டு. ஐந்தாறு கூட்டங்கள் காரைக்குடியிலேயே நடைபெற்றன. மற்ற எல்லாக் கூட்டங்களும் மகளிர் இல்லத்திலேயே தான் நடைபெற்றன. சுமார் எட்டு மாத காலம், சனி, ஞாயிறு நாட்களிலும், இடையிடையே கல்லூரி விடுமுறை நாட்களிலுமாக, நடைபெற்றன. மகளிர் இல்லத்தில் பத்தாம் எண் அறையில் ஆராய்ச்சியாளர்களுக்கு செவி அமிழ்தத்தை நண்பர் முருகப்பா அவர்கள் வழங்க, அவர்கள் துணைவியார் மரகதவல்லி அம்மையார் எங்கள் நாவையறிந்து நல்ல உணவு வகைகளை உண்ணும் அறையில் எங்களுக்கு வழங்கினர்கள். "மகளிர் இல்லத்து மாப்பிள்ளை ராய. சொ." அவர்கள் இருந்ததால் எங்களுக்கெல்லாம் ஏதாவது குறைவு இருக்க முடியுமா?

குமார் நாற்பது ஆண்டுகளாகப் பொது வாழ்வில் ஈடுபட்டு சொற்பொழிவுகளாலும் "குமரன்" ஆசிரியராக இருந்து எழுத்துக்களாலும் இருபத்தைந்து ஆண்டுகள் பணியாற்றி மக்கள் மனத்தோடு நன்கு பழகியதாலும் சமூக சமய சீர்திருத்த இயக்கங்களிலும் அரசியலும் தொண்டாற்றிப் பண்பட்டிருந்ததாலும், இப்படியெல்லாம் பாடல்களைப் பல கோணங்களில் ஆராய அறிவு விளக்கம் ஆயிற்றே என்று எண்ண வேண்டியிருக்கிறது. மதுரைத் தமிழ் சங்கத்தில் படித்த சு. சிதம்பர அய்யர் அவர்களிடம் இலக்கணம் பயின்றதால் பெற்ற தமிழறிவு துணையாக இருந்ததால் அவருடைய இயல்பான நுண்ணறிவு வளர்ச்சியுற்று, புலவர்கள் எல்லாம் மெச்சும் படியான ஆராய்ச்சி வன்மையைப் பெற்றிருக்கிறார்கள்.

நண்பர் முருகப்பர் அவர்கள் இளமையாக இருந்தபோது வசதி இல்லாததால் ஆங்கிலக் கல்வி பெற வாய்ப்பு இல்லாது போய்விட்டது. பிறப்பால் சைவராதலால் இளமையிலேயே சைவநூற் பற்று ஏற்பட்டு, சமய இலக்கியங்களில் நல்ல பயிற்சியைப் பெற்றார்கள். சுற்றியிருந்த புலவர்களும் சைவர்கள்; சூழ்நிலை எல்லாம் சைவம். எனவே கம்பராமாயணத்தில் இவ்வளவு அழுத்தமான பற்று எப்படி ஏற்பட்டிருக்கக் கூடும் என்று எண்ணியிருந்த யான் ஒரு நாள் துணிந்து முருகப்பா அவர்களையே இதைக் கேட்டுவிட்டேன்.

இளமையில் சைவச் சூழ்நிலையில் இருந்தாலும், வால்மீகி இராமாயணச் சொற்பொழிவுகளைக் கேட்பாராம்; அக் காலத்தில் அவற்றிற்குத் தான் செல்வாக்கும் இருந்ததாம். நண்பர் பி. ஸ்ரீ. அவர்கள் 1924 லிருந்து 1927 வரை, "குமரன்" பத்திரிகைக்குத் துணையாசிரியராக இருந்தபோது, அவர் இப் பக்கங்களில் அடிக்கடி கம்ப ராமாயணச் சொற்பொழிவுகள் செய்வாராம். அவருடைய நட்பால், அவருடன் பழகியதால், பல நல்ல கம்ப ராமாயணப் பாடல்களை அறிய வாய்ப்புக்கள் கிடைத்ததாம். அதிலிருந்து கம்பராமாயணத்தைப் படிக்க வேண்டும் என்ற எண்ணம் எழுந்ததாம். இந்த நிலையில் 23-3-39ல் தேரழுந்தூரில் நடைபெற்ற கம்பர் விழாவுக்கு ரசிகமணி டி. கே. சி அவர்களால் அழைக்கப்பெற்று நண்பர் புதுமைப் பதிப்பகம் அ. லெ. நடராஜன் அவர்களுடன் சென்றார்களாம். அந்த விழாவைக் கண்டு களித்துக்கொண்டிருக்கும் போது காரைக்குடியிலும் அத்தகைய திருநாள் ஒன்றை நடத்தலாம் என்ற எண்ணம் பிறந்ததாம்.

காரைக்குடிக்கு வந்ததும் ஹிந்து மதாபிமான சங்கத்தின் ஆதரவில் ஒரு கம்பன் திருநாள் செயற்குழு அமைத்து, அதில் விழாக் குழுவின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்களாம். இயல்பாகவே தொண்டிற்குத் துடித்து நிற்கும் சா. கணேசன் அவர்கள் செயலாளராகவும் மெ. நா. சித. சிதம்பரம் செட்டியாரவர்கள் பொருள் காப்பாளராகவும் தேர்ந்தெடுக்கப் பெற்றார்களாம். 2-4-39ல் காரைக்குடியில் ரசிகமணி டி. கே. சி அவர்கள் தலைமையில் முதலாவது கம்பன் திருநாள் நடைபெற்றதாம். அன்றிருந்து மிகச் சீரிய முறையில் காரைக்குடிக் கம்பன் கழகச் செயலாளராக இருந்து சா. கணேசன் அவர்கள் கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழை வளர்த்து வருகிறார்கள். வானொலி வாயிலாக அகில உலகமும் இவ்விழா நிகழ்ச்சிகளைக் கேட்டு அனுபவித்து வருகி

கிறது என்பது நமக்குத் தெரியும். தொடக்கத்திலிருந்த சுறுசுறுப்பு, உற்சாகம், ஆகிய பண்புகள் சிறிதும் குறையாமல் இன்றும் அப்பணி சீரிய முறையில் நடைபெற்று வருவதைத் தமிழ்நாடு போற்றத்தான் செய்கிறது.

காரைக்குடிக் கம்பன் கழகத்திலிருந்த பல பதிப்புக்களை நண்பர் முருகப்பா அவர்கள் நன்கு படித்தார்கள். அவற்றைப் படிக்கும்போது "கம்பர் காவிய மாகிய பூஞ்சோலை காட்டு விலங்குகளின் மேய்ச்சலிடமாகி அழிபட்டிருக்கிறது. அது மட்டுமல்ல, அங்கே உயர்ந்த கனிமரங்களும், பூஞ்செடிகளும் இருந்த இடங்களில் கள்ளியும் கற்ருழையும் முளைத்து மிரட்டுகின்றன" என்பதைக் கண்டார்கள். கம்ப ராமாயணத்தில் ஒரு நல்ல பதிப்பு வரவேண்டும் என்ற ஏக்கம் ஏற்பட்டது. அந்த ஏக்கத்திற்கு வடிவு கொடுத்து "நல்ல பதிப்பு வர வேண்டும்" என்ற தலைப்பில் ஒரு கட்டுரையைத் தமிழ் மக்கள் முன் வைத்துள்ளார்கள். அக் கட்டுரை 1940ல் காரைக்குடியில் நடைபெற்ற கம்பன் திருநாளை யொட்டி நவயுகப் பிரசுராலயத்தார் வெளியிட்ட "கம்பன் கவிதை" என்ற நூலில் காணப்படுகிறது.

இதன் பிறகு, ரசிகமணி டி.கே.சி. அவர்கள் கம்ப ராமாயணத்தை நல்ல முறையில் பதிப்பிக்க வேண்டும் என்று முயற்சி எடுத்தார்கள். நெடுநாள் அந் நூலை நன்ருகப் படித்து சுவைத்து, பல்லோரைச் சுவைக்கச் செய்து, ஆராய்ந்தார்கள். நல்ல பாட்டுக்கள் என்று பல பாடல்களைத் தேர்ந்தெடுத்து அவற்றை "இவைதான் கம்பன் பாடல்கள்" என்று துணிந்து கம்ப ராமாயணத்தில் பால, அயோத்தியா, ஆரணிய காண்டங்களை வெளியிட்டிருக்கிருர்கள். புதுமைப் பதிப்பகத்தார் இவற்றை நல்ல முறையில் பதிப்பித்திருக்கிருர்கள். சொந்த திருத்தங்களை அதிகமாகப் பாடல்களில் ஏற்றி விட்டபடியால், பல அபிப்பிராய பேதங்கள் கிளம்பின. இத் திருத்தங்களைச் சிலர் விரும்பி ஏற்கிருர்கள்; சிலர் கட்டோடு வெறுக்கிருர்கள். இதெல்லாம் அவரவர்களின் மனப்போக்கை யொட்டிய விஷயம். எது எப்படியாயினும் தமிழ் மக்களிடையே கவிதைச் சுவையைப் பிரசார முறையில் பரப்பிய பெருமை ரசிகமணி டி.கே.சி. அவர்களைச் சாரும் என்பதைத் துணிந்து கூறிவிடலாம்; அவ்வளவு தூரம் தொண்டு செய்திருக்கிருர்கள்.

இந்த நிலையில் சொந்தத் திருத்தங்களைப் பாடல்களில் செய்யாமல் இருக்கிற பாட பேதங்களைக் கொண்டு சிறந்த பாடல்களைத் தேர்ந்தெடுத்து ஒரு நல்ல கம்பராமாயணப் பதிப்பை வெளியிட விரும்பினர்கள் நண்பர் முருகப்பர் அவர்கள். 1945 லிருந்து அவ் விருப்பத்தின் தூண்டுதலால் பதிப்புக்கு வேண்டிய செயல்களில் இறங்கினர்கள். சொற்பொழிவுகளுக்குக்கூட அதிகம் போகாமல் கம்ப ராமாயணத்தைப் படித்துச் சுவைப்பதிலும் பல பிரதிகளிலுள்ள பாடல்களையும் பாட பேதங்களையும் ஒப்பு நோக்கி ஆராய்வதிலும் காலத்தை எல்லாம் செலவிட்டார்கள். ஏழாண்டுகள், தான் இடைவிடாது உழைத்த தன் பயனக சுமார் 3200பாடல்களைப் பெருக்கி யிருக்கிருர்கள். பாட பேதங்களை ஆராய்ந்து சரியானவை என்று தான் கருதியவற்றைப் பாடல்களில் சேர்த்திருக்கிருர்கள்.

பாலகாண்டம் இப்போது அச்சுப் பொறி ஏறிவிட்டது. அது உரையுடன் விரைவில் வெளிவந்துவிடும். உரை சாதாரண மக்களை மனத்தில்

வைத்துக்கொண்டு அவர்கட்குப் புரியும்படி எழுதப்பெற்றிருக்கிறது. என்ருலும், புலவர்கட்கும் திறனய்வாளர்கட்கும் அதில் குறிப்புக்கள் இல்லாமல் இல்லை. சில இடங்களில் சந்தர்ப்பத்தையும் தேவையையும் ஒட்டி பிற நூல்களிலிருந்து, குறிப்பாகச் சங்க நூல்களிலிருந்து, மேற்கோள்களும் ஒப்புமைப் பகுதிகளும் எடுத்துக் காட்டப்பெற்றிருக்கின்றன.

பொதுவாக, இப்பதிப்பைப்பற்றிச் சில சொற்கள் கூறத்தான்வேண்டும். சொந்த திருத்தமே இதில் யில்லை. ஏடுகளிலோ, அல்லது இதுகாறும் வெளிவந்திருக்கும் பதிப்புக்களிலோ உள்ள பாடல்களைக் கொண்டுதான் பாடல்கள் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கின்றன. பாடல்களுக்குப் பாடத் தெளிவு ஏற்படவில்லையானல் பாடல் கைவிடப்படுமே யன்றி, தன் விருப்பப்படி அவற்றைத் திருத்தும் வழக்கமே இல்லை. கதையின் தொடர்பு கெடாதவாறும் காவிய நயம் குன்ருதவாறும் பாடல்கள் பொறுக்கப் பெற்றிருக்கின்றன.

'பாடல்களை இலக்கியக் கண்கொண்டு பார்க்கவேண்டுமே யன்றி, சமயப் பிரசார நோக்கோ சாதிபேத நோக்கோ அன்றிப் பழைய இலக்கிய மரபுக்கு மாறுபட்ட நோக்கோடு அவற்றைப் பார்க்கக் கூடாது' என்பதை அடிப்படையாகக் கொண்டுதான் பாடல்களைப் பார்க்கவேண்டும். இப்போதுள்ள கம்ப ராமாயணம் செருகு கவிகள் மலிந்து, அளவில் பெரிய நூலாகக் காட்சி யளிப்பதால் முழு நூலையும் ஆராய்ந்து படிப்பவர் குறைவு. கதையின் கட்டுக் கோப்பிற்குத் தேவையற்ற கிளைக் கதைகளைக்கூறும் பாடல்கள் அனைத்தும் நீக்கப் பெற்றுவிட்டால் பெரும் புலவர்கள் கூட நூலின் சில பகுதிகளை சொற்பொழிவு போன்ற தேவையையொட்டிப் படிக்கின்றனரே யன்றி நூல் முழுவதையும் படிப்பதில்லை. ஆகவே, காவியத்தை யாவரும் மலைப்பின்றி எளிதில் படித்து அனுபவிப்பதற்கென்றே "இராம காதை" உரையுடன் வெளிவருகிறது. இப்பெயரைத்தான் தன் நூலுக்குக் கம்பர் சூட்டியிருக்க வேண்டும் என்பதைப் பதிப்பாசிரியர் ஆராய்ந்து முடிவு கட்டியிருக்கிருர்கள்.

அறுபது ஆண்டு முடிந்த முதுமைப் பருவத்தில் இருபதாண்டு இளைஞன் போன்று நண்பர் முருகப்பா அவர்கள் இலக்கிய சேவையில் இறங்கியிருக்கிருர்கள். கம்ப ராமாயணத்தை நல்ல முறையில் பதிப்பிக்க வேண்டும் என்ற பணியில் இறங்கி இருப்பது தமிழ் மக்களின் பேறு என்றுதான் சொல்ல வேண்டும். சமயங்களை நோக்கும்போது சமரசப் பார்வை வேண்டும் என்பதை ஆராய ஒரு ஹிந்து மதாபிமான சங்கத்தைத் தோற்றுவித்த முருகப்பா அவர்கள், சமயப்பிரசாரக் கண்கொண்டு இலக்கியத்தைப் பார்க்கக் கூடாது என்பதை எடுத்துக்காட்ட 'இராம காதை' யைப் பதிப்பிக்கிருர்கள். சமய நூல்களைப்படிப்பது வேறு; இலக்கியநூல்களைப் படிப்பது வேறு என்பதைத தமிழ் மக்கள் அறிய வேண்டும். சமயப் பற்று வேறு, சமய வெறி வேறு, இரண்டையும் போட்டுக் குழப்பியதால் வந்த வினைதான் சமயப் பிணக்கு. இப் பிணக்குதான் சமயப் பூசல்களாக மாறி, பல மாறுபட்ட கதைகளைத் தோற்றுவித்திருக்கின்றன.

நண்பர் முருகப்பா அவர்கள் முதுமைக் காலத்தில் செய்துவரும் இலக்கியப் பணியைத் தமிழகம் விருப்பத்துடன் ஏற்கவேண்டும். தமிழ் மக்கள்

அவர் சேவையைக் கட்டாயம் பாராட்டுவார்கள் என்பதற்கு ஐய மில்லை. ஒரு காலத்தில் சமயப் பிணக்கை நீக்குவதற்குப் பாடுபடத் தோற்றுவித்த 'ஹிந்து மதாபிமான சங்கத்தை' மிகச் சிறந்த முறையில் மக்கள் பேணி வளர்ப்பதைப் போலவே, இலக்கியத்தைப் பார்க்கும்போதும் சமயப் பிரசாரக் கண் கொண்டு பார்த்தல் கூடாது என்ற நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு பதிப்பிக்கப் பெறும் "இராம காதையும்" தமிழ் மக்களால் பாராட்டப் பெறத்தானே வேண்டும்? தமிழ் மக்கள் என்ன செய்யப் போகிறார்கள்? பொறுத்திருந்து பார்ப்போம். அறுபதாம் ஆண்டு விழா வன்று, நண்பர் முருகப்பா அவர்கள் இன்னும் ஆயிரம் பிறை கண்டு வாழ வேண்டும் என்று உளமார வாழ்த்துகிறேன். வாழ்க முருகப்பாவும், அவர்களின் துணைவியாரும். வாழ்க அவர் தம் தொண்டு!!

---

## எழுதினர், பேசினர், செய்தார்.

திரு. சொ. முருகப்பா அவர்களைச் சுமார் முப்பது ஆண்டுகளாக எனக்குத் தெரியும். அவர் வாழ்க்கையை மூன்று சொல்லால் சுருக்கிச் சொல்லலாம். எழுதினர் - பேசினர் - செய்தார் என. பல சீர்திருத்தக்காரர்களுக்குச் செய்தார் என்ற சொல் சொல்ல வராது. வேண்டுமானல் ஆரவாரம் செய்தார் என்று சொல்லலாம்.

சொ. முருகப்பா எழுத்துப் பத்திரிகையிலும், நூல்களிலும் வெளிவந்துள்ளன. சீர்திருத்தத் துறையிலும் கல்வித் துறையிலும் அவர் பேச்சு எண்ணிறந்தன. அவர் செயலை வாழ்க்கையிலும் மகளிர் இல்லத்திலும் காணலாம். மக்களை அளப்பதில் அவருக்கு இருந்த கூர்மையான அறிவு அவர் தொண்டுக்கு வெற்றிதந்தது. மலேயாவில் வந்து யாவரும் போற்ற, சில மாதங்கள் நல்ல தமிழ்த் தொண்டு செய்தார்கள். அவரும் அவர் குடும்பமும் அவர் தொண்டும் சிறக்க இறைவன் அருள்புரிவானாக.

கா. இராமநாதன்.

## தியாக சீலன்

கொள்வனவும் தவிர்வனவும்
குறித்தறிந்து திருத்திவிடில்
நம்ம தத்தில்
எள்ளளவும் தீமையுண்டோ?
இதுசெய்வீர்! எனத்தமது
சொல்லாம் வெள்ளி
வள்ளமதில் பகுத்தறிவுப்
பால்வழங்கிப் புகழ்கொண்ட
கலைவல் லாளன்;
தெள்ளுதமிழ் நாட்டிற்கும்
மொழிகலைக்கும் தொண்டாற்றும்
தியாக சீலன்!

தமிழ்நாட்டில் இதுபோலப்
பள்ளிவே றிலை! என்றே
சாற்று மாறு
அமைதியுறத் தொண்டுசெயும்
முருகப்பர்க்கு, அறுபதாண்
டணிநாள் என்ற
அமிழ்தூறும் செய்திகேட்
டகமகிழ்ந்தேன்! மணிவிமகன்
அணைவ ரோடும்,
இமிழ்கடல்சூழ் மண்ணெல்லை
எங்குந்தன் பேர்பரவ
இனிது வாழ்க!

வித்வான். K. கந்தசாமி.

# செயற்கரிய செய்த பெரியார்

வித்துவான். வே. அண்ணாமலை.

'முருகப்பா' தனவணிக மக்களின் வரலாற்றுச் சுவடியிலே பொன் எழுத்துக்களால் பொறித்து வைக்கத் தக்க ஒரு பெயர்.

முருகப்பா என்றவுடன் நம் உள்ளம் விழிப்படைவது ஏன்? அப் பெயருக்கு - அப் பெயர் சூடிய பெரியாருககு உள்ள ஆற்றல்தான் என்ன? அப் பெரியார் செய்த செயற்கரும் செயல்களை, ஒல்லும் வகையில் சிறிதளவு உரைக்க முயல்கிறேன்.

முருகப்பா என்றவுடன், வயது வளர்ந்தாலும் வலிமை தளரவில்லை என்பதை எடுத்துக் காட்டும் ஒற்றை நாடியான உருவம்; அறிவும், அநுபவமும் முதிர்ந்தவர் என்பதை எடுத்துக்காட்டும் தலை; பிறர் உள்ளத்தின் ஆழத்தை உணர்ந்தறியும் உறுப்பிற் சிறந்த கண்; சிந்தனைச் சுவடு படிந்து கிடக்கும் பரந்து விரிந்த நெற்றி; நிறைந்த நினைவாற்றலை எடுத்துக் காட்டும் நீண்டகூரிய மூக்கு; இவை தான் நம் புறக்கண்ணுக்குப் புலப்படும். ஆனல் 'முருகப்பா' என்றவுடன் அவர் செய்த செயற்கரிய செயலகள் தாம் நம் அகக்கண் முன் ஒன்றன்பின் ஒன்ருகக் காட்சி அளிக்கும்.

"ஊன் ஊண் துறமின் உயிர்க் கொலை செய்யன் மின்" என்று "தொல்லாணை நல்லாசிரியர்" கூறிய தற்கேற்ப, உயிர்ப்பலி செய்து உண்ணுவது கூடாது என்று ஊர் ஊராகச் சென்று சொற்பொழி வாற்றினர்கள். 'ஆடு கோழி நீடு வாழ்க' என அச்சடித்த துண்டுத் தாள்களை வெளியிட்டார்கள். இன்று உயிர்ப் பலி செய்வது தடை செய்யப் பட்டுள்ளது என்ருல், அது முருகப்பாவின் செயற்கரிய செயலாகும்.

முருகப்பா அவர்கள், 'சிறு நுண் எறும்பின் சில்லொழுக் கேற்ப'த் துன்பங்கள் தொடர்ந்து வந்தாலும் சரி, அல்லது மலை குலுங்கிலுைம் சரி, மண் குலுங்கினுலும் சரி மனங் குலுங்க மாட்டார்கள். இன்று அறுபது ஆண்டுகளை எட்டிப் பிடித்த அந்தப் பெரியார், இன்னும் நெடிதுநாள் இனிது வாழ்ந்து, நாடும், மொழியும், சமூகமும் முன்னேறத் தொண்டு பல புரிய எல்லாம் வல்ல இறைவன் இன்னருள் புரிவானுக!

---

# பெருமைக்குரியவர்!

நாடும் கலையும் நலமுற்று
நல்ல வாழ்வு சிறந்துஓங்க

ஓடும் காலம் அதைஉணர்ந்து
உவகை யுடன்நல் பணிபுரியும்

ஏடு புகழும் இராமகதை
எவரும் கற்கச் செய்ஏந்தல்!

நீடு வாழ்க முருகப்ப
நேயன் வாழ்க வாழியவே!

கே. எஸ். கருப்பையா.

# அரிய நண்பர்

எஸ். வையாபுரிப் பிள்ளை.

செட்டிநாட்டுப் பிரதேசத்தில் எனக்கு மிகப் பழமையான நண்பர்களிலொருவர் திருவாளர் சொ. முருகப்பா. அவர், 'குமரன்' என்ற மாதப் பத்திரிகைக்கு ஆசிரியராக இருந்தார். பத்திரிகையின் தொடக்கக் காலத்தில் அவரோடு ஒத்துழைத்து வந்த நண்பர் திரு. பி ஸ்ரீ ஆச்சாரியா.

செட்டிநாடு இளைஞர் பகுதி, முதியோர் பகுதி என இரண்டாகக் கூறுபட்டு, நோக்கம் பற்றியும் கொள்கை பற்றியும் முயற்சி பற்றியும் அங்குள்ள மக்கள் இருதிறத்தா ராயினர். இளைஞர்களுக்காக அவர்களது முயற்சி முதலியன செவ்வையான முறையிற் செல்லும்படி ஆத்மார்த்தமாக உழைத்து வந்தவர் அன்பர் முருகப்பர். இவ்வுழைப்புக்குப் பெருந்துணை புரிந்து வந்தது இவர் ஸ்தாபித்த காரைக்குடி ஹிந்துமதாபிமான சங்கம். இச் சங்கத்தின் வாயிலாக நமது நாட்டிலுள்ள பெரியோர்களை எல்லாம் வரவழைத்து சொற்பொழிவுகள் நிகழ்வித்துத் தாய்மொழியாகிய தமிழ் மீதும் தமிழ் இலக்கியத்தின் மீதும் இளைஞர்களும் முதியோர்களும் பேராவல் கொள்ளும்படி செய்துவந்தனர்.

தமிழிலக்கிய வளர்ச்சியைக் கருதி நூதன முறையில் சிற்சில நூல்களையும் இவர் இயற்றியுள்ளார். இவற்றுள் ஒரு சில நூல்களை நான் வாசித்துள்ளேன். அவை மிகவும் பாராட்டத்தக்கவை. கம்ப ராமாயணப் பதிப்பு விஷயமாக இவர் எழுதியுள்ள நூல் இவரது நடுநிலைமையையும் பரிசீலனத் திறத்தையும் நன்கு விளக்குகிறது. பேச்சாளர் என்ற நிலையிலும் முருகப்பா ஓர் உயர்ந்த நிலையை எய்தியுள்ளார். பெருநோக்கத்துடன் தாம் மேற்கொண்ட கொள்கைகளை ஆவேசங்கொண்டு இவர் விரித்துப் பேசுவதை நான் பலமுறை கேட்டிருக்கின்றேன். படாடோபமின்றி நேரடியாக, கேட்போர் மனங் கிளர்ச்சியுறும்படியாகப் பேசவல்ல அரிய திறமையை இவரிடத்தே காணலாம். தாம் கண்ட செட்டிநாட்டில் ஆசாரச் சீர்திருத்தங்கள் மிகவும் அவசியமென்பதை நண்பர் மிகவும் எளிதிலுணர்ந்தார். இதன் பொருட்டு இவர் செய்துவந்த முயற்சிகளைப் பலரும் எதிர்த்தபோதிலும் அஞ்சாது பின்னடையாது மனத்திட்பத்துடன் மேலும் மேலும் முயற்சி செய்து பல இளைஞர்களும் சீர்திருத்தங்களை மேற்கொண்டு ஒழுகுமாறு செய்தனர். தமது நாட்டுப் பெண்கள் பல துறைகளிலும் முன்னேற்றமடைய வேண்டுமென்று கருதி அவர்களுக்கென ஒரு கலாசாலையும் நிறுவி நடத்தி வருகின்றனர்.

முருகப்பர் ஓர் அரிய நண்பர். இனிய குணம் படைத்தவர். போலித் தன்மையை வெறுத்து உண்மைத் தன்மை ஒளிரும் உள்ளத்தவர். பல்வேறு வகைகளில் திறமையுடன் தொண்டுபுரிந்து வரும் நண்பர் சொ. முருகப்பா, நீடுழி வாழ்ந்து நமது நாட்டுக்கும் தாய்மொழிக்கும் மேன்மேலும் தொண்டு புரிந்து வருமாறு இறைவன் அருள்புரிக. அவர் நிறுவிய இந்துமதாபிமான சங்கம் நீடு வாழ்க.

# முருகப்பனே வாழ்க!

வே. வ. இராமசாமி.

தமிழ்நாட்டுச் சான்றோர்கள் நடாத்தும் சிறப்பு நாட்களைக் குறித்து ஆராய்ந்தால் அதிற் பல நுண்பொருட் குறிப்புகள் அமைவு உடையனவாகப் பொதிந்து கிடத்தலை நன்கு உணரலாம். அத்தகைய நன்னாட்களுள் அறுபதாவது ஆண்டு விழாவும் ஒன்று. ஐந்து வியாழ வட்டங்கள் இந்தத் தமிழ் கூறும் நல்லுலகத்திலே வாழ்ந்து பெரும்பாலும் அன்பு வாழ்க்கையும் பொதுவாக அருள் வாழ்க்கையும் நடத்திய ஒருவர் அறுபது ஆண்டுகட்குப் பின்பு அருள் வாழ்க்கையைச் சிறப்பாகவும் அன்பு வாழ்க்கையைப் பொதுவாகவும் கொள்ளுவதற்கு அமைந்த திருநாளே இந்தத் திருநாளாகும். மறுமாலை சூடுவது என்பதும் இதற்குப் பெயர். திருமண வாழ்விலே ஒருவனும் ஒருத்தியும் நறுமண மலர் மாலை சூடித் தங்களுக்குள் இணங்கிக் கொண்ட இன்ப வாழ்வின் அன்பு மாலை இந்த அறுபதாவது ஆண்டிலேதான் மாற்றிக்கொள்ளப்படுகின்றது. இதுவே தமிழனது துறவற வாழ்வு என்று கருதுதலும் தகும். "மக்களோடு மகிழ்ந்து மனையறங்காத்து"ப் பின்பு, "தொலைவில் சுற்றமொடு துறவறங் காத்த"லே தமிழ் நாட்டிற் பெரும்பான்மையாகும். இளமையிலேயே துறந்து செல்லுவது நம் நாட்டில் மிகவும் குறைவு

"துறவறமாவது மேற்கூறிய இல்லறத்தின் வழுவாது ஒழுகு அறிவுடையராய்ப் பிறப்பினை யஞ்சி வீடு பேற்றின் பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம்" என்றுதான் உரையாசிரியர் பரிமேலழகரும் எழுதியுள்ளார் ஆகவே இந்த அறுபதாவது ஆண்டில் உறவினர், நண்பர், அயலவர் முதலிய எல்லோரும் மகிழ்வாக விருந்து அருந்தி வீற்றிருக்கத் தலைவனும் தலைவியும் ஒருங்கே வீற்றிருந்து மக்களும் இளைஞரும் பேரன்மார் பேத்திமார்களும் முன்பு தாம் காணாத திருமணத்தைக் கண்டுகளிக்க, மாலை மாற்றிக் கொண்டு, தூய குழந்தையுள்ளமாக உள்ளத்தை மாற்றி முன்னைய நிலையிலுள்ள பற்றாசைகளை விடுத்து எவ்வுயிர்க்குஞ் செந்தண்மை பூண்டொழுகும் வாழ்க்கையை மேற்கொள்கின்றனர். இத்தகைய அந்தண்மை தரும் குறிப்புள்ள இந்தத் திருநாள் நல்ல முறையாக நடத்தல் வரவேற்றற்கும் பாராட்டுதற்கும் வாழ்த்துதற்கும் உரிய நன்னாளாகும்.

அறுபது ஆண்டுகட்கு மேலான வயது உள்ளவர்கள் எல்லோரும் இத்தகைய குறிக்கோள்கொண்டு எல்லாத் துறைகளிலும் இலங்கினால் நாட்டின் பண்பாடும் பொதுவாழ்வும் அரசியல் வாழ்வும் எல்லா வகையிலும் சிறக்குமென்பதில் ஐயமில்லை. 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனாக' வாழ்வதற்கு முற்றிலும் ஒருப்பட்டு முனைந்து வாழத் தொடங்கும் அருள்நெறி வாழ்க்கையின் தொடக்க விழா இந்த அறுபதாம் ஆண்டின் விழா வாகும். இந்த முறையாகக் கங்கணங் கட்டிக்கொண்டு மனத்தைத் தூயதாக எப்போதும்-

ஈப்போ நகரத் தண்ணீர்ப்பந்தலில் சொ. முரு.
(1914)





முருகப்பா—மரகதவல்லி திருமணம்
திருப்பரங்குன்றத்தில் (29 - 6 - 29) நடைபெற்றது

வைத்துக்கொண்டு வாழ்கின்ற பெரியோர்களே தமிழ்ப் பண்பாடு, தமிழ் நாகரிகம், தமிழ்க் கலை முதலியவற்றிற்குப் பேரெல்லையாகத் திகழ வேண்டும். இவ்வாறு இவர்கள் உலகுக்கு நன்றாற்ற வேண்டு மென் பதனையே ஆசிரியர் தொல்காப்பியனார் "சிறந்தது பயிற்றல்" என்று குறிப்பிட்டார். இவ்வாறு மாசறக் கழுவிய மணி போன்று திகழ்வதற்கு ஏற்பட்ட இந்தத் திருநாள் வாழ்வதாக.

இப்போது நண்பர் முருகப்பா அவர்களுக்கு அறுபதாவது ஆண்டுத் திருநாள் என்பது தெரிய வந்ததும் என்னால் நம்ப முடியவில்லை. அவர் இன்னும் இளைஞராகவேதான் காணப்படுகின்றார். அவர் செய்கின்ற பொதுத் தொண்டுகளும் அவற்றாற் பெற்ற வெற்றியும் அதனாலாகிய மகிழ்வும் அவர்களை முருகு தவழும் இளமை வடிவாகவே திகழச் செய்து கொண்டு வருகின்றது.

முப்பது ஆண்டுகட்கு முன்னர் நாங்கள் அளவளாவிப் பழகத் தொடங்கினோம். நண்பரவர்கள் அரசியற் பணி புரிந்தவர்கள். சைவ சமய வளர்ச்சிக்கு நல்ல தொண்டு ஆற்றியவர்கள். இத்தகை அன்பர் சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்புவதிலும் தாம் சொல்லியவாறு நடக்கும் செப்பத்திலும் தமக்கு ஒப்பில்லாதவர்.

நாட்டில் இளமைப் பருவமுள்ள கைம் பெண்கள் படும் அல்லலையும் அதனை நீக்குவதற்குச் செயல் முறையில் உடனடியாக இறங்க வேண்டு மென்பதனையும் விளக்கித் திட்ப நுட்பமாகப் பேசிவந்தார். கலப்பு மணத்தைப் போற்றிப் பெருஞ் சொற் பெருக்கும் ஆற்றினர். இவ்வாறு பேசுகின்ற அண்ணல் தாம் சொல்லியவாறு தாமும் நடப்பாரோ என்று எழுந்த வினாவிற்கு விடையாக, திரு. மரகதவல்லி யம்மையாரைக் கலப்பு மணமும் செய்துகொண்ட பெருந் தகை. அவ்வாறு மணஞ் செய்து கொண்ட இருவரும் யாதொரு வேறுபாடுமின்றிக் கருத்தொருமித்து நல் வாழ்க்கை நடத்தி வருவதும் பாராட்டு தற்கு உரியதாகும். சீர்திருத்த வாழ்வில் தாமும் முன்னணியிலிருந்து செய்து காட்டி மற்றவர்களுக்கும் உறுதுணையாக இருந்து நடப்பித்த அன்பரவர்கள் பொதுத் தொண்டிற் சிறந்த பணிகள் ஆற்றி வருகின்றனர். மகளிர் இல்லம் வைத்து அதனைச் சிறப்பாக நடத்தி வருவதும் மற்றும் பல துறைகளிலும் நற்பணி புரிவதும் பாராட்டிற்கு உரிய செயல்களாகும். 'ஹிந்து மதாபிமான சங்கம்' வைத்தும் பணி புரிந்து வந்தார். இங்ஙனம் எல்லாவற்றிலும் நல்லன கொண்டு சீர்திருத்தக் கருத்துக்களைப் பரப்புவதிலும் நடந்து காட்டுவதிலும் முப்பது ஆண்டுகளுக்கு முன்னிருந்தே எங்களுடன் உறுதுணையாக இலங்கிவரும் சிறந்த நண்பர்.

இத்தகைய அருமை நண்பர் முருகப்பா அவர்களின் அறுபதாவது ஆண்டு நன்னாளில் அவர்களை வாழ்த்துவதற்கு மிகவும் மகிழ்கின்றேன். சீர்திருத்தச் செம்மல் முருகப்பா வாழ்க. உயிர்களுக்கு இரங்கும் அருள் நெறி யண்ணல் முருகப்பா வாழ்க. கைம்பெண்களின் கண்ணீர் மாற்றிய பெருந்திறல் வாழ்க.

மகளிர் இல்லம் நடத்தும் மாண்பு நிறைந்த நண்பர் முருகப்பாவும் அவர்களின் துணைவியார் மரகதவல்லி யம்மையாரும் நீடு வாழ்க என்று வாயார மனமார வாழ்த்துகின்றேன்.

தமிழ் வெல்க!

# கலை ஆர்வம்!

ஆ. நடராஜன்.

சொ. முருகப்பா இன்று அறுபதாவது ஆண்டு நிறைவடைகிருர்; அவருடைய சிறந்த தொண்டுகளையும் நல்லியல்புகளையும் பாராட்டுவது பொருத்தமாகும். அவருடன் பழகும் பேறு பெற்றவன் என்ற அளவில், அவருடைய வாழ்க்கையின் சிறப்பான பகுதிகள் சிலவற்றை இங்கே சுட்டிக் காட்டுவதில் மகிழ்ச்சியடைகிறேன்.

சீர்திருத்தவாதி, எழுத்தாளர், பேச்சாளர், கல்வித் தொண்டிலும் ஈடுபட்ட அறிஞர் என்ற மட்டில்தான் தமிழ் நாடு முருகப்பாவை அறியும். அவர் மனத்திண்மையும், கொள்கையில் உறுதியும், அளவுகடந்த அன்புணர்ச்சியும், இனிமையாக உரையாடும் திறமையும், பண்பட்ட கலை ஆர்வமும் உடையவர்.

காரைக்குடிக்கு வராதவர்கள் கூட, காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தைப் பற்றிக் கேள்விப்பட்டிருப்பார்கள். அதை நிறுவியவர்களுள் முருகப்பாவும் ஒருவர்.

சமூகப் பணியில் ஈடுபட்ட முருகப்பா, தாம் பிறந்த செட்டியார் சமூகத்தின் குறைபாடுகளை நன்கு உணர்ந்தார். முதலில், அதைத் திருத்த முயன்ருர் தனவைசிய ஊழியர் சங்கத்தைத் தொடங்கினர். "தனவைசிய ஊழியன்" என்ற இதழை நடத்தினர். செட்டியார்கள் மாநாட்டைக்கூட்டுவித்து, பழமையில் அழுந்தியமக்களிடையே சீர்திருத்தப் புயல் என்னும் காற்று வீசச் செய்தார். திரவியம் தேடித் திரை கடல் செல்லும்போது, பெண் மக்களையும் அழைத்துச் செல்ல வேண்டுமென்று முழங்கினர். பெண்களுக்கும் கல்வி கற்பிக்க வேண்டுமென்று வற்புறுத்தினர்.

"தனவைசிய ஊழியன்" இதழை அவர் நடத்தியதைப்பற்றி முன்னரே குறிப்பிட்டுள்ளோம். "குமரன்" "சண்டமாருதம்" ஆகிய இதழ்களுக்கும் அவரே ஆசிரியராக இருந்து வந்தார். தேசீயம், இலக்கியம், தன்மான உணர்ச்சி, சமூக சீர்திருத்தம் ஆகியவற்றைப் பரப்பிப் புகழ்பெற்ற "குமரன்" இதழை முருகப்பா பல்லாண்டுகள் நடத்தி வந்தார். அந்த இதழ் மூலமாக, அவர் பிற்காலத்தில் சிறந்து விளங்கிய தமிழ் எழுத்தாளர் பலரை இலக்கியத் துறையில் ஈடுபடுமாறு ஊக்கப்படுத்தினர். அவருடைய தூண்டுதலின்றேல், பல அறிஞர்களைத் தமிழ்மக்கள் தெரிந்து கொள்ளும் வாய்ப்பு ஏற்பட்டிராது. கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்களைத் தமிழ் நாட்டுக்கு அறிமுகப் படுத்தி வைத்த பெருமையும் அவருக்கே உரியது.

அமராவதிபுதூர் அருகே, காடு வெட்டிக் கடிய நிலத்திருத்தி, மாண்டிசோரி முறையில் சிறுவர்க்குக் கல்வி புகட்ட, மகளிர் இல்லத்தை முருகப்பா தோற்றுவித்திருக்கிருர். அங்கு தான் அவர் இப்போது வாழ்ந்து வருகிருர். அங்கு கல்வி பயிலும் சிறுவர் சிறுமியரின் நல் வாழ்வில் அவருக்கு அக்கரை மிகுதியாக உண்டு. அங்குள்ள மாண்டிசோரி

முறைப்பள்ளி, சிறுவர் தொடக்கப் பள்ளி, ஏழை மாணவர் விடுதி ஆகிய வற்றைத் திறம்பட நடத்துவதையே அவர் தமது வாழ்க்கையின் கடமையாகக் கொண்டிருக்கிறார். "என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற வாக்குக்கு ஏற்பத் தம்வாழ்வை வகுத்துக் கொண்ட முருகப்பாவின் பணி பல துறைகளில் தமிழ் நாட்டுக்குத் தேவைப்படுகிறது. அது கிடைக்கும் என்பதில் தடை என்ன? முருகப்பா நீடு வாழ்க!

---

# சேவைக்கு அர்ப்பணம்!

எந்நாட்டவரும் இனிது போற்றும் சிறந்த தமிழகத்தில், செட்டிமார்நாடு ஓர் சிறந்த பகுதி. இங்கு வாழும் பெரும்பாலான மக்கள், அன்பு, அறம், நெறி, குணம், பக்தி, ஈகை, கண்ணியம், கட்டுப்பாடு முதலிய நன்னெறியில் அசைக்க முடியாத நம்பிக்கையுள்ளவர்கள்.

சுமார் நாற்பது ஆண்டுகட்கு முன், புதுமையும், புத்துணர்ச்சியும் கலந்த இளந்தென்றல் இங்கு வீச ஆரம்பித்தது. காலச் சுழலில் கட்டுண்டு கிடந்த தமிழன், நாகரிக உணர்ச்சி தலை தூக்கி எழுந்த காலம் அது. அந்த எழுச்சியும், விறுவிறுப்பும், நமது அறிஞர், சொ. முருகப்பா அவர்களை இறுகத் தழுவின. முந்திய, பிந்திய காலச் சூழ்நிலையைச் சீர்தூக்கிச் சிந்தித்துப்பார்த்து, சேவைக்காகத் தன்னை அர்ப்பணித்துக் கொண்டார்கள். அவர்களைப்பற்றி நான் அறிந்துகொண்ட சிலவற்றை இங்கு குறிப்பிட விரும்புகிறேன். ஹிந்து மதத்திலுள்ள நல்லது, தீயதை நாட்டு மக்கட்கு, கருத்தினிக்க, காது குளிர, நல்ல தமிழ்ப்பாணியிலே பலப்பல சொற்பொழிவு ஆற்றினர்கள். அதற்கு உறுதுணையாக ஊக்குவித்து, அவர்கள் நிறுவியது ஹிந்து மதாபிமான சங்கம்.

பெரியார் சொ. முருகப்பா அவர்கள் அன்றுமுதல் இன்று வரை செய்துள்ள சேவைகள் அளப்பரிது. சுருங்கக் கூறினல், செட்டிமார் நாட்டிற்கே சீர்திருத்தச் செம்மல் திரு சொ. முருகப்பா அவர்கள் என்று சொன்னல், அது மிகை அன்று. அத்தகைய மேதைக்கு அறுபது ஆண்டுகள் பூர்த்தியாகி, மணிவிழாக் கொண்டாட, அவர்கள் நிறுவிய ஹிந்து மதாபிமான சங்கத்தார் முனைந்துள்ளது மகிழ்ச்சிக்குரியது. போற்றத் தக்கது.

"தோன்றிற் புகழொடு தோன்றுக", எனக் கூறிய வள்ளுவப் பெருந்தகையின் வாய்மைக் கேற்ப, வாழ்ந்து, வளர்ந்து, வளம்பெற்ற திரு. சொ. முருகப்பா அவர்களின் வாழ்க்கையின் புதுமை இப்பகுதி இளைஞர்கட்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

மணிவிழாக் கண்டு மகிழும் அறிஞர், சொ. முருகப்பா அவர்களை நாங்கள் இன்றும் இளைஞராகவே காண்கின்றோம். அவர்கள் இன்னும் பன்னெடுங் காலம் பாரினில் வாழ்ந்து, நன்னெறி காட்டி, நாட்டுக்கு உழைத்திட எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கின்றேன்.

**வாழ்க முருகப்பா !**
**வளர்க நும் வாழ்வு !!**

அழ. பழநியப்பன்.

# ஆசிரியர் தேவை

நாக. முத்தையா.

'ஆசிரியர் தேவை' என்று ஒரு முறை விளம்பரப் படுத்தி இருந்தார் 'குமரனில்' முருகப்பா என் நண்பர் நாச்சியாபுரத்தைச் சேர்ந்தவர் விளம்பரத்திற்கு விண்ணப்பித்திருந்தார். 'ஞாயிற்றுக்கிழமை காலை என்னை வந்து சந்திக்கவும்' என்று பதில் எழுதி இருந்தார். வேலையை விரும்பிக் கேட்ட என் நண்பருக்கு முருகப்பா. முருகப்பா அவர்கள் புலவர் போட்டி நடத்திக்கொண்டிருந்த சமயம் அது. என் நண்பர் குறிப்பிட்டபடி ஞாயிற்றுக்கிழமை காலை எட்டு மணிக்கெல்லாம் மகளிர் இல்லம் சென்று முருகப்பாவிற்காகக் காத்துக்கொண்டிருந்தார். மாலை மணி எட்டாகியும் முருகப்பாவைக் காண முடியவில்லை. சந்திக்க வரும்படி சொல்லிவிட்டுச் சரியானபடி நடத்தவில்லையே என்று என் நண்பருக்குக் கோபம். அவர் ஒரு சிறந்த புலவருங் கூட. எடுத்தார் சிறு தாளை. எழுதினார் இரண்டு வரிகள். வீட்டிற்குத் திரும்பிவிட்டார்.

முருகப்பா இரவு பத்து மணிக்கு இல்லம் வந்து சேர்ந்தார். பேட்டிக்காக வந்திருந்தவர் தந்து சென்ற சிறு துணுக்கை அவரிடம் அங்கிருந்தவர்கள் கொடுத்தார்கள். அதைப் படித்துப் பார்த்த முருகப்பாவின் முகம் மலர்ந்தது. ஆனால், உள்ளம் எதையோஎண்ணி கடுகடுத்திருந்தது. அப்படிஅதில்என்னதான் இருந்தது?

"காலைமுதல் காத்திருந்தும் காணாத
காரணத்தால்,
நாளை வருவேனோ நான்?"

அழகான குறள் முருகப்பாவிற்குச் சிரிப்பையும் கோபத்தையும் ஒரு சேரச் தந்த சொற் சித்திரம்.

பாட்டை ரசித்த முருகப்பாவின் உள்ளம் பண்பாட்டை யோசித்து என் நண்பரை வேலைக்கு வைத்துக் கொள்ள மறுத்துவிட்டது. இப்போது அந்த நண்பர் கேரள நாட்டில் சிறப்புற வாழ்ந்து வருகிறார்.

நான் டாக்டர் அழகப்பா கல்லூரியில் படித்துக்கொண்டிருந்தபோது கல்லூரி பொதுக்கழக செயலாளனாக பணியாற்றி வந்தேன். அவ்வமயம் தமிழ் விழா நடத்தினேன். அதற்கு சொ. முருகப்பாவைத் தலைமை தாங்கவும், கி. ஆ. பெ. விசுவநாதத்தைப் பேசவும், ஏற்பாடு செய்திருந்தேன். எங்கள் தமிழாசிரியருக்கு நாமக்கல் ராமலிங்கம் பிள்ளையைத் தலைமை தாங்க அழைத்திருக்க வேண்டும் என்ற ஆசை. நானோ முருகப்பாவைத் தலைவராக்கி இருந்தேன். ஆத்திரங்கொண்ட அவர் என்னிடம் அசம்பாவிதமாகக் கேட்டார்.

'மு. சொருகப்பா இன்று தலைவராக்கும்'

நான் சொன்னேன் அவரிடம் அதே தோரணையில்,

'ஆம், ராமக்கல் நாமலிங்கம் பிள்ளை வர இயலாது என்று சொல்லிவிட்டாரே? அதற்கு என்ன செய்வது?' ஆசிரியர் முகத்தைச் சுளித்துக் கொண்டு அப்பால் போய்விட்டார். முள்ளை முள்ளால்தானே எடுக்க வேண்டும்.

வல்லான் முருகப்பன் வாழ்க பல்லூழி.

## தனவைசிய ஊழியர் சங்கம்



இடமிருந்து வலம்: அ. ராம. ராம. இராமனுதன் செட்டியார், சொ. முருகப்பா, அழ. அருணுசலன், பிச்சப்பா சுப்பிரமணியன், ராம. ப. மெ. ப. மெய்யப்ப செட்டியார், வை. சு. ஷண்முகன், ராய. சொக்கலிங்கன்.

## முருகப்பா தம்பதிகள்



இரண்டாவது வரிசையில் மாலையுடன் அமர்ந்திருப்பவர் சொ. முருகப்பா. பின் வரிசையில் நிற்கும் பெண்களில் இடமிருந்து மூன்ருவதாக நிற்பவர், திரு. சொ. முருகப்பா அவர்களின் மனைவியார், திருமதி. பொற்கொடியாள் ஆச்சி.

# அந்த நாள்

வித்துவான், மெ. சுந்தரம்.

'எல்லோரைப் போல நாமும் வாழ்ந்தால் என்ன? ஏன் நமக்குப் புது வழி' என்று எண்ணிய பழமை விரும்பிகளின் நடுவிலே, சமுதாயத்திலேயே புது இரத்தம் பாய்ச்ச வேண்டும்; மக்கள் வாழ்விலே மலர்ச்சி வேண்டும்' என்று நினைத்த சீர்திருத்தச் செம்மல்கள் ஏளனத்திற்கு இடனுய், கேலிக்கு உறைவிடமாய், கிண்டலுக்கு இருப்பிடமாய், பார்வைக்கு நிலைக்களனுய் விளங்க வேண்டியிருந்தது அந்த நாளில். அந்த 'அந்த நாள்' மனிதர்தான் நம் திரு. சொ. முருகப்பா அவர்கள் அந்த நாள்—ஏதோ அண்மையில் இருப்பதாகச் சொல் கூறுவது போல் தோன்றுகிறது. ஆனல், ஆண்டு அறுபதைக் கடந்து அது நம்மை அழைத்துச் செல்லுகிறது.

சமுதாயக் காடு கெடுத்து நாடாக்கிய சான்றோர் வரிசையிலே முருகப்பாவின் பெயர் முதலிடம் பெறுவது வெள்ளிடைமலே.

மாதர் மறுமணத்தில் தொடங்கி மகளிர் இல்லத்திற்கு வர ஆண்டு அறுபது ஆகியிருக்கிறது; அண்ணலுக்கு குழவிப் பருவத்தையும் சேர்த்தே குறித்திருக்கிறேன், அது இன்றி எதிர்கால வாழ்வு இன்மையின்.

அறுபதாம் ஆண்டு, பிறந்த ஆண்டைக் கண்ணுலே காணும் பேறு கொடுக்கும் ஆண்டு; பெற்ற வெற்றிகளை எண்ணிப் பார்த்து பெருமிதம் அடையும் நேரம். கடந்து வந்த பாதைகளைத் திரும்பிப் பார்த்து, இதழின் கடைக் கோடியிலே புன்முறுவல் பூக்கும் சமயம். கடமையை முடித்த களிப்பைக் கண்ணிலே தேக்கிக் காட்டும் காலம். விட்ட பெருமூச்சும், சிந்திய வியர்வையும், ஏற்ற ஏளனமும் மதிப்புப் பெறும் காலம். அந்த நன்னளை அணிபெறக் கொண்டாடி மகிழ்கிருர், 'அந்த நாளும் வந்திடாதோ' என்று சிந்துபாடி, எதிர் காலத்திலே தன்னம்பிக்கையை வைத்திருந்த ஏந்தல்.

இவர்தம் வாழ்வு, சமூக சீர்திருத்தத்தோடு மட்டும் நின்றுவிடவில்லை. பல துறைகளிலும் பரவிப் படர்ந்தது கொடி போல 'குமரன்' இதழ், இவர்தம் இலக்கிய நுண்மாண் நுழைபுலத்தினை விளக்கும் ஒரு ஏடு. இலக்கியச் செல்வத்தினை எல்லோருக்கும் பங்கீடு செய்து கொடுத்த பெருமை இவர்களைச் சாரும். கம்பன் கடலில் முத்துக் குளிப்பவர்கள் இவர்கள். திமிங்கிலமும், சுருவும் நீந்துவது கண்டும் அதிலே திளைப்பவர்கள். பழந்தமிழ்ப் பாக்களைச் சுவைத்து நயங் காண்பதில், கண்டு பிறர்க்கு உரைப்பதில் வல்லாளர். தலைசிறந்த 'ரசிகர்' தமிழ் இசைக் கூட்டாரத்திற்கும் இவர்கள் செல்லாமல் இல்லை. இதைக் 'குமரனும்' கூட்டிய மாநாடுகளும் கூறும். தமிழ் இசை, நாட்டில் பரவ ஆவன செய்த முன்னணி முதல்வர்களில் ஒருவர். இப்பொழுது 'மகளிர் இல்லம்' நடத்தி வருகிருர்கள். மகாரின் தக்க நல்வளர்ச்சியே மாநிலத்திற்கு

முதுகெலும்பு' என்று உணர்ந்த காரணத்தால்; குழந்தைகளின் உளப் போக்கை நன்கு உணர்ந்து அதற் குத்தக அளிக்கப்படும் கல்வியே குழந்தைகளை வீட்டின் செல்வங்க ளாக ஆக்குவது, நாட்டுப் பூந்தோட் டத்தின் நறுமலர்களாக்குவது என்று உரைத்துச் செல்வர் உளநூல் ஆசிரி யர்கள். அக் கருத்தை உளத்துத் தாங்கி நாளும் குழந்தைகளோடு குழந்தையாகப் பழகி, அந்தக் குழந் தையுள்ளம் பெற்றுக் கல்வி நல்கும் கடமையிலே சிறந்து விளங்கும் முரு கப்பர்க்கே நாடு நன்றி செலுத்தும் கடப்பாடுடையது. இவர்கள் இன்று மேற்கொண்டிருக்கும் தொண்டு பெரி யதொரு பொதுநலத் தொண்டு. நாட்டு முன்னேற்றத்திற்கு வழிவகுக்கும் திட்டங்களில் முதலாவதாக மேற் கொள்ள வேண்டியதை, நெடு நாள் முன்னரேயே மேற்கொண்டு ஆற்றிவரும் அண்ணலுக்குத் தமிழ கத்தார் கடமைப் பட்டுள்ளனர். ஏனெனில் தமிழகம் வாழ வேண்டு மானல், இன்று அதன் மடியிலே தவ ழும் மகார் தக்க முறையில் உடல் வளர்ச்சியும் அடைய வேண்டும். அதற்கு அமராவதி புதூரிலே அடி கோலப்படுகிறது. 'கால்கோள் விழா' துவங்கியாயிற்று; இனி 'அறுவடை விழா' தான் எஞ்சி நிற்பது.

முருகப்பா தன் எதிர்காலச் சந்ததி யாருக்கு விளக்கி விடுத்த குறள்

"துன்பம் உறவரினுஞ் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை"

என்பது உறுதியாக; இறுதியில் இன்பம் தருவதாய் இருந்தால், துன் பத்தைத் துணைக்கழைத்தாவது அந் தக் காரியத்தைச் செய்து முடிக்கச் சொன்னர் வள்ளுவர்; செய்து காட்டி னர் முருகப்பர்.

## சமூக சீர்திருத்தத் தனி வீரர்

நமது தமிழகம் நல்லறிஞர் பல் லோர் குழுமியது. காவிரிப்பூம் பட் டினத்தைப் புலவர்கள் மறக்க மாட் டார்கள்; கரிகாற் பெருவளத்தான் மீது பாட்டப்பட்ட பட்டினப்பாலையே ஒரு சான்ருகும். அந் நகரில் பலவ கைச் சமூகங்கள் சுமூகமாக வாழ்ந் தன; தனவைசியர்களும் ஒரு பெருஞ் சமூகமே; அந் நகரத்திலிருந்து ஏதோ ஒரு காரணத்தால் பாண்டி நாட்டுக்கு இவர்கள் குடியேறினர்.

காரைக்குடியில் வாழும் ஒன்பது கோவில் நகரத்தார்களில் பிள்ளையார் பட்டிக் கோயிலைச் சேர்ந்த சொக்க லிங்கஞ் செட்டியார் புதல்வர், திரு. முருகப்பா அவர்கள். முருகப்பா வைச் சுமார் நாற்பது ஆண்டுகளாக நான் அறிவேன், காரைச் சிவனடி யார் திருக்கூட்டத்துக்கு அவர் தலைவ ராக இருந்தார். சிவகாருண்யப் பிர சாரத்தை அவருடன் கூடி நானும் செய்தேன்.

தனவைசியர்கள் தாம் ஈட்டிய பொருளை புதுமை திருமணம் முதலிய விசேடங்களில் பெருஞ் செலவு செய் வதை முருகப்பா அவர்கள் வன்மை யாகக் கண்டித்தார்; இளமை மணத்தை மறுப்பதையும், கலப்பு மணம் புரிவதையும், ஆதரித்தும் பிரசாரம் செய்தார்.

இவர் நடத்தும் மகளிரில்லம் வள ரொளி ஞாயிருக மிளிர்கின்றது. மாண்டிசோரி முறை சிறு குழந்தை களுக்கு அறிவொளி காட்டுகிறது. திருமதி. மரகதவல்லி அம்மையாரும் முருகப்பாவும் தமிழ் வளம் பெருக்கி யும், பொது அறம் பேணியும் நீடுழி வாழ வேண்டும் என்பது எனது பூரண நினைவாகும் உலகருள் சக்தி இதற்குத் துணையாவதாக. சுபம்.

வ. மு. இரத்தினேசுவர அய்யர்

# தனவணிகரும் ஹிந்து மதாபிமான சங்கமும்

வை. சு. ஷண்முகன்.

நம் சங்கம் நிறுவியவர்களில் தலையாய நண்பர் சொ. முருகப்பா அவர்களின் அறுபதாண்டு நிறைவு விழாவில், அவர்கட்குச் சிறப்புச் செய்யும் பாராட்டுக் கூட்டத்தில் நம் சங்கம் தோன்றிய வரலாற்றை அனைவரும் அறிய ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

நம் அன்பர் சொ. முருகப்பா அவர்களுடன் கடந்த முப்பத்தாறு ஆண்டுகளாக நான் நட்புரிமை கொண்டிருக்கிறேன். நள வருடம் பங்குனி மாதம் கஅம் நாள் (31-3-1917) அன்று காரைக்குடியில் நண்பர் அ. ராம. ராம. இராமநாதன் செட்டியார் அவர்கள் வீட்டில், சொ. முரு. அவர்களை முதன் முதலாகக் கண்டேன்.

பொழுது போக்காக அங்கு அன்பர்கள் சிலர் சீட்டாடிக்கொண் டிருந்தார்கள். அப்போது பக்கத்திலிருந்து அவர்களில் ஒருவருக்கு அன்பர் சொ. முரு. ஆட்டம் சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

யாசகம் பெற அங்கு வந்த புலவர் ஒருவரிடம் இரண்டு மூன்று அன்பர்கள் பேசிக்கொண்டிருந்தோம். அதில் சொ. முரு. வந்து கலந்துபேசியபோது அவர்கட்குத் தமிழ்ப் புலமை இருப்பது தெரிந்தது. அவர்கள் பேசிய துடுக்கான, கவர்ச்சிகரமான பேச்சு என் உள்ளத்தைக் கவர்ந்தது. அவர்கள் சென்ற பிறகு விசாரித்ததில் அவர் பெயர் எஸ். முருகப்பன் என்று சொன்னார்கள்.

தேவகோட்டையில் அப்போது நடந்த 'வைசிய மித்திரன்' வாரப் பத்திரிகையில் எஸ் முருகப்பன் என்பவர் சில மாதங்கட்கு முன் எழுதிய கட்டுரை ஒன்று பார்த்தது நினைவுக்கு வந்தது.

"தேவை! தேவை!! மந்திரவாதிகள் தேவை!!! அறியாமை என்ற பேய் தனவணிகப் பெண்களைப் பிடித்திருப்பதால் அவர்களும் பேயாகிவிட்டனர். அந்த இரு பேய்களும் தனவணிக ஆண் மக்களைப் பிடித்தாட்டி வைக்கிறது. அவைகளை விரட்டத்தக்க மந்திரவாதிகள் தேவை!" என்பதுதான் அக்கட்டுரையின் சுருக்கம்.

அந்தக் கட்டுரை எழுதிவர்தான் எஸ். முருகப்பன் என்பவர் என்று தெரிந்தது. அவர்களைப் பார்க்க வேண்டுமென்று நண்பர் அ. ராம. ராம. அவர்களிடம் கூறியதும் ஆள் அனுப்பினார்கள். நண்பர் சொ. முரு. பத்தே நிமிடங்களில் அங்கு வந்தார்கள்.

"எதற்காக என்னைப் பார்க்க விரும்பினீர்கள்?" என்றார்கள். 'மந்திரவாதிகள் தேவை! அவசரத் தேவை! என்று விளம்பரம் செய்தீர்களே! அத்தகையோரிடமிருந்து மனுக்கள் ஏதும் வந்ததா?" என்றதும் "வரவில்லை, அடுத்த மகாமகத்துக்குள் வராது என்பதும் எனக்குத் தெரியும்" என்றார்கள். "வரமாட்டார்கள் என்பதனாலேயே அவசரத் தேவை என்று அழைப்பு விட்டீர்

களோ? அப்படியானல் அத்தகை யோர் முன் வந்தாலும் அவர்களுடன் ஒத்துழைக்கவும் நீங்கள் தயாரில்லை யோ?'' என்ற வினவுக்கு, ''யார் சமூ கத் தொண்டு செய்ய முன்வரப்போகி ருர்கள்? மகிபாலன்பட்டி மு. சின் ஜோயா செட்டியாரும், வைசிய மித்தி ரன் இராமனுதன் செட்டியாரும் ஏழு எட்டு ஆண்டுகளாக எழுதிமுயற்சிக்கி ருர்கள் யாரும்முன்வரககாணுேமே!'' என்ருர்கள். ''பத்திரிகையில் எழுதி விட்டால் போதுமா? அவ்விருவரும் வெகு தொலேவில் இருக்கிருர்கள். நம் சமூகத் தொண்டு புரிய நம் பகு திக்கு நடுநாயகமாக விளங்குகின்ற காரைக்குடியில் ஓர் சங்கம் நிறுவ லாகாதா? தமிழ் மொழி வளர்ச்சி கருதி மேலேச்சிவபுரியில் சன்மார்க்க சங்கம், அன்பர் மு. கதி. அவர்கள் முயற்சியால் ஏழெட்டு ஆண்டுகளாகத் தோன்றி வேலே செய்கிற மாதிரி தொண்டு புரியலாம்'' என்றதற்கு ''மேலேச்சிவபுரியில் வ. பழ. சா. குடும் பத்தார் பொறுப்போற்றிருக்கிருர் கள். இங்கு யார் பொறுப்பு ஏற்பது?'' என்ருர்கள். ''நீங்கள் இருக்கிறீர் கள், அன்பர் அ. ராம. ராம. இருக் கிருர்கள். இங்குள்ள மற்றவர்களே யும் சேர்த்துக்கொள்ளலாம்'' என் றேன். அதுமுதல் அடிக்கடி காரைக் குடியிலும் கானுடுகாத்தானிலும் அன்பர்கள் சொ. முரு. அ.ராம.ராம. இருவர்களுடன் சந்திப்பு ஏற்பட்டது.

நம் சமூக சீர்திருத்தத்தைப் பற்றி முதன் முதலாகக் கட்டுரை எழுதி சொற்பெருக்காற்றி வந்த அன்பர் காலஞ் சென்ற மு. சின்ஜோயா செட் டியார் அவர்களேக் கண்டுபேச 12—8—1917 அன்று அன்பர்கள் சொ. முரு, அ. ராம. ராம. வுடன் மகிபாலன்பட்டி சென்று அவர்களு டன் இரண்டு நாட்கள் தங்கி ஆலோ சனே பெற்றேம்.

15-9-17 அன்று கண்டமாணிக் கத்தில் விவேகானந்த சபை ஆண்டு விழா மகிபாலன்பட்டி மு. சின்ஜோயா செட்டியார் தலைமையில் நடந்தது. நம் நண்பர் சொ. முரு. அதில் தான் முதன் முதலாக நம் சமூக வளர்ச்சி பற்றிச் சொற்பெருக்காற்றினர்கள். சொ. முரு அவர்கள் அப்போது இயற்றிய பாடலைக் கீழே காணலாம்.

**'' உள்ளம்பூ ரித்தோம்**
**உவகை மிகக்கொண்டோம்**
**வெள்ளஆ னந்தம்**
**மிகப் பெற்ருேம்—கள்ளமிலாக்**
**கண்டமா ணிக்கம்அதில்**
**கண்ணியனும் சின்னேயனேக்**
**கண்டமா ணிக்கம்—எனக் கண்டு ''**

தமிழ்ப் புலவர் சிதம்பர அய்யரை ஆசிரியராகக்கொண்டு நம் சங்கத்தில் தமிழ்க் கலாசாலே ஒன்று தொடங் கிற்று. பல அன்பர்கள் அதன் மூலம் மொழி வளர்ச்சி அடைந்தனர். அன்பர் ராய. சொக்கலிங்கனர் அவர் கள் கல்வி நலம் பெற்றது இக கலா சாலேயிலேயே.

இக்கலாசாலேயே நம் சங்க அங்கத் தவர் மாதக் கூட்டங்கள் நடத்தி, நாவன்மை பெறச் சொற்பொழி வாற்றிப் பழக நல்ல வாய்ப்பாக இருந்தது.

நம் சங்கம் தோன்றிய இரண்டு ஆண்டுகட்குள் உள்நாடு வெளிநாடு களில் வாழ்ந்த தனவணிகர்கள் 150 பேருக்கு மேல் நம் சங்கத்தில் உறுப் பினராகப் பெருகிச் சங்கம் நல் வளர்ச்சி பெற்றது.

1918 முதல் நம் குல வளர்ச்சிகருதித் துண்டுப் பிரசுரங்கள் வெளியிட்டு, நம்மவர்கள் தங்கும் ஊர் நகரத்தார்க் கும் செய்கோன், சையாம், மலாயா,

பர்மா, இலங்கை முதலிய நாடுகளில் உள்ள நகரத்தார்களுக்கும் அனுப்பினேம்.

செட்டிமார் நாட்டில் நடந்த திருவிழாக்களிலும் தனவணிகர் கூடும் இடங்களில் எல்லாமும் நம்சங்கஉறுப்பினர்கள் சென்று குல வளர்ச்சி நாடி 96 ஊர்க் கூட்டத்தை மீண்டும் கூட்டிவிட வேண்டும் என்று பேசி வந்தனர் அவர்கள் அனைவரும் ஹி. ம. சங்க உறுப்பினர்கள்தாம்.

தமிழ் நாட்டில் சமயத்துறை, நாட்டு நலம், மொழி வளர்ச்சி, இனப்பற்று ஆகிய வழிகளில் முயலும் நல்லோர்கள் பெரியோர்கள் அனைவரும் நமது சங்கத்தின் ஆண்டு விழாக்களிலும் இடையேயும் நம்முடன் ஒத்துழைத்ததால் நம் ஹி. ம. சங்கம் பல நல் வாழ்த்துக்களைப் பெற்றுவிட்டது.

அக்காலத்தில் தமிழ் நாட்டிலிருந்த பெரியோர்களில் எவருமே நம் அழைப்புக் கிணங்கி வந்து நம்முடன் கலந்து சங்கத்தை வளர்க்க ஒத்துழைக்கத் தவறியதே இல்லை என்று துணிவாகக் கூறலாம்.

நம் ஹி.ம. சங்கம் பெற்ற நல்வளர்ச்சியின் பயனகத் தனவணிகர்களிடையே நம குறிக்கோள்களில் முதலாவதான சமூகத் தொண்டுபுரிய மேடைகளை உண்டாக்கக் கூடிய ஆற்றலைப் பெற்றுவிட்டோம்.

11-9-1919 அன்று மாலை நான்கு மணிக்கு நம் சங்க நிலையத்தில் நம் ஹி. ம. சங்க உறுப்பினருள் முதன்மையான சிலர் தனவைசிய ஊழியர் சங்கத்தைத தோற்று வித்தனர். அந்த ஊழியர் சங்கம் கடுமையான நிபந்தனைகளை உடையது. அதன் திட்டங்களில் ஒன்று 'தனவைசிய ஊழியன்' என்ற பெயரில் ஒரு வாரப் பத்திரிகை நடத்த வேண்டும் என்பது. நம் சங்கத்தின் உறுப்பினர்களில் சிலர்தான் அதன் உறுப்பினர். ஊழியர் சங்கத்தின் முதல் செயலாளரும் சொ. முரு. அவர்கள்தான்.

28-9-19 அன்று தனவணிக மரபின் வளர்ச்சியில் ஆர்வம் உள்ள தேவகோட்டை கரு. கி. சொர்ண நாதன் செட்டியார் அவர்களிடத்தில் ஆலோசனை வாழ்த்துப் பெற நண்பர் சொ. முரு, காலஞ்சென்ற நம் சோதரர் அமராவதிபுதூர் பிச்சப்பா சுப்பிரமணியன் இருவருடன் தேவகோட்டை சென்றேம். "20க்கும் 24க்கும் இடையே வயதுடைய கட்டிளங் காளைகளான உங்கள் நல்ல எண்ணம் தொண்டு எல்லாம் நிறைவெய்தும். என்னலான உதவிகளைச் செய்கிறேன். நான் உங்களில் ஒருவன்" என வாழ்த்தி அனுப்பினர்கள்.

நம் சங்க உறுப்பினருள் எண்மர் சேர்ந்து ஊழியர் சங்கம் கண்டனர். அவர்களில் எழுவரை 27-9-19 அன்று நாமக்கல் கவிஞர் இராமலிங்கனர் நிழல் படம் பிடித்தார். "நேற்றிருந்தவர் இன்று இல்லை என்ற பெருமையை உடையது உலகு" என்று பொய்யாமொழியார் கூறுகிற பெருமைக்கு இலக்கான உறுப்பினர் பிச்சப்பா சுப்பிரமணியம் அவர்கள் ஒருவர் என்பதை நம் ஹி.ம. சங்கத்தினர் ஒருபோதும் மறக்க முடியாது. அப்படத்தில் உள்ளோர் எழுவரில் அறுவர் இன்றும் நலமே வாழ்கின்றேம்.

28-10-19 அன்று நம் கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் அவர்கள் கானடுகாத்தான் வரும் வழியில் நம் நண்பர்களால் வரவேற்கப் பெற்று

முதன் முதலாகக் காரைக்குடியில் காலை 10-30க்கு வந்து இறங்கினார்கள். சிவன் செயல் ஊருணித் தென்கரையில்தான் அப்போது மதுரை பஸ் வந்து நிற்குமிடம்.

நம் கவியரசர் பாரதியாருடன் வந்த தோழரையும் கவியரசருடன் ஏக வசனத்தில் அவர் பேசுவதையும் கண்ட நம் அன்பர்கள் ஹி.ம. சங்கத்தில் அவர்களைப் புகவிட இணங்கவில்லை. எனினும் அவருடன் பேச, அவர் பாடல்களை அவர் பாடுவதைக் கேட்க விரும்பியதால் என்னுடன் நம் கவிஞர் பெருமானைக் கானாடுகாத்தானுக்கு அனுப்பவும் இணங்கவில்லை. நம் கவிஞர் திலகத்தைக் காலஞ்சென்ற செ. அ. ராம. முருகப்ப செட்டியார் அவர்கள் வீட்டுத் தோட்டத்தில் அவருடைய தோழருடன் இறக்கினோம். அங்கேயே அவர்களின் குளியல், உணவு முடிந்தது.

நம் கவிஞர் பெருமானின் அழகிய திருவடிவும் நிறமும் மீசை விரைப்பும், அன்பு கனிந்து வெடிப்புறப் பேசிய பேச்சும், உணர்ச்சி மிகுந்த நடுங்க வைக்கும் தோற்றத்துடன் நெஞ்சில் பதியுமாறு சொற்களை வீசிய வீரமும், அசையாத தெய்வ நம்பிக்கையும் புலமையின் தெளிவும் எல்லோர் உள்ளத்தையும் கவர்ந்து விட்டன. தாம் இயற்றிய பாடல்களைப் பண்ணோடும் உணர்ச்சியோடும் அவர் பாடியது கேட்டு நம் அன்பர்கள் அளவிலா மகிழ்ச்சிப் பெருக்கடைந்த பிறகு எங்களைப் புறப்பட அனுமதித்தனர்.

28-10-1919 அன்று மாலை கவியரசர் கானாடுகாத்தான் வந்து சேர்ந்தார்கள். 6-11-19 அன்று எதிர்பாராத விதமாக மாலை 3 மணிக்குப் புறப்பட்டுக் கடையம் செல்லவேண்டும் என்றார்கள். அன்று பயணமாகக் காரைக்குடி சென்றார்கள்.

6-11-19 அன்று நம் ஹி. ம. சங்கத்தின் அமைப்புக்களையும் உறுப்பினரின் தொண்டுகளையும் ஆர்வத்தையும் மாலை நேரில் பார்த்ததும் புனிதமான புலவரின் உள்ளம் பூரித்துவிட்டது. மறுநாட் காலை அவர் செல்வதாக இருந்ததைக் கைவிட்டு விட்டார்.

நம் ஹிந்து மதாபிமான சங்கம் என்றும் மறக்க முடியாத வாழ்த்துப் பாக்களை நம் கவியரசரிடமிருந்து பெற ஓர் நல்ல வாய்ப்பாக அது அமைந்தது. ஹிந்து மதப் பெருமை, ஹிந்து மதாபிமான சங்கம் பெற்றிருந்த வளர்ச்சி, நம் உறுப்பினர்களின் பண்பாடு, ஊக்கம் அனைத்தையும் கண்டு அணு அளவும் பிழையில்லாத உண்மைகளை ஒருங்கே கொட்டி வைத்திருக்கிற வாழ்த்துப் பாக்கள் அவர் மகிழ்ச்சிப் பெருக்கில் பொங்கி மலர்ந்த இளமை மணம் மாறாத பூங்களாக இன்றும் நம் உள்ளந்தோறும் மணங் கமழ்ந்து விளங்குகின்றன.

அப்போதையத் தமிழ் நாட்டின் தவப்பயன், உள்ளத் துறவு பெற்ற சிறந்த வேதாந்தி, மாசுமறுவற்ற நாட்டன்பர், இணையற்ற தமிழ்த் தொண்டர், மனிதப் பிறவில் உயர்வு தாழ்வு கூறுதல் ஐயத்துக்கு இடமில்லாத பாவமாகும் என்று துணிந்து கூறி அதன்படி வாழ்ந்து வழிகாட்டிய வீரர், மங்கையர் முன்னேற்றத்தில் மட்டிலா ஆர்வங்கொண்ட மகான் பாரதியார், மிடுக்குடன் வேகமாக எவர் நெஞ்சத்தையும் கொள்ளை கொள்ளும் வண்ணம் புரட்சிக் கருத்துக்களை உரை நடையும் பாடலுமாக நம்மிடையே கொட்டிவிட்டு 32 ஆண்டுகட்கு முன்பே நம்மை விட்டுப் பிரிந்து விட்டார்கள்.

புனித உள்ளங்கொண்ட நம் புலவர் ஏறு பாரதியாரிடம் நம் சங்கம் பெற்ற வாழ்த்துக்கள், நமக்குத் தோன்றும் இன்னல்களைத் தடுத்து நிறுத்தி மறுமலர்ச்சி தரும் என்பது நிரூபிக்கப் பெற்ற உண்மையாக நிலவுகிறது.

நம் கவியரசர் 6-1-20 முதல் 10-1-20 வரை மறுமுறையாகக் கானாடுகாத்தான் வந்திருந்தார்கள். நம்சங்கத்தில் அக் கவிஞரின் நிழல் படம் எடுத்து அது நம்மிடம் இருக்கிற வாய்ப்பைத் தமிழ் நாட்டில இருந்த வேறு எந்தச் சங்கமும் பெறவில்லை. பாரதியாரின் வாழ்நாளில் இரண்டு முறையே நம் பகுதிக்கு வந்தார்கள். அப்போது இரு வாழ்த்துப்பாக்கள்தான் பாடினார்கள். முதலாவது தமக்கு விருப்பமான ஒரு தனிமனிதர் மீது. இரண்டாவது நம ஹி. ம. சங்கத்தின் மீது. வேறு பாடல் எதுவும் இப்பகுதியில் இருந்தபோது அவர்கள் பாடவில்லை.

8-9-20 அன்று பொதுவாக ஹிந்து மதாபிமான சங்கத்தை முழுமனதுடன் ஆதரிக்கவும் சிறப்பாகத் தனவணிக குல வளர்ச்சியை ஆதரிக்கவும் "தனவைசிய ஊழியன்" என்ற வாரப் பத்திரிகை தோன்றியது. அதன் ஆசிரியர் சொ. முரு. அவர்கள்தான். அப்பத்திரிகை தோன்றிய ஓராண்டுக்குள் ஊழியர் சங்க உறுப்பினர்கள், காட்டிய வழியில் அதற்கு உறுதுணையாக, நம் ஹி. ம. சங்கம் நின்றதனால், 60 ஆண்டுகளாகக் கூடாது கிடந்த 96 ஊர்க் கூட்டத்தை, அதை இனிக் கூட்ட முடியாது எனப் புரளிபேசியவர்கள் தலை கவிழ்ந்து - நம் குறிக்கோளுக்கு இணங்கி வணங்குமாறு கூட்டி வைத்த பெருமையைத் "தனவைசிய ஊழியன்" பெற்றுவிட்டது.

செட்டிமார் நாட்டுக் கிராமங்களில் பெரும்பாலான ஊர்களில் எல்லாம் நம் ஹி. ம. சங்கத்தின் உறுப்பினர்கள் தொகை பெருகி நின்றது. அவர்கள் உதவி பெற்று நம் தனவணிக குலத்தில் வெளிநாட்டில் வசித்தோர் உள்பட உள்ள முழுப்புள்ளி, அரைப்புள்ளி, மணமாகாத சிறுவர், சிறுமியர் விதவைகள், குழந்தைகள் ஆண் பெண் அடங்கலுக்கும் ஊர் வட்டகை, கோவில் பிரிவுகள் ஆகியவற்றை விவரமாக நம் ஊழியர்கள் கணக்கெடுத்தனர்.

<u>15-7-1921 அன்று கோவிலூரில் 96 ஊர்க்கூட்டம் நடந்தது.</u> தனவணிகர்கள் 96 ஊர்களில் வாழ்ந்த காலத்தில் நம் குலத்தவர் மகாநாட்டுக்கு 96 ஊர்க் கூட்டம் என்ற பெயர் இடுகுறிப் பெயராக இருந்தது. நம் குலத்தினர் 78 ஊர்களில்தான் அப்பொழுது வசித்தனர் என்ற உண்மை அப்போது தான் வெளிப்பட்டது.

18-8-21 அன்று கோனாபட்டில் எண்ணூற்றுக் கதிகமாக உறுப்பினர்களான தனவைசிய வாலிபர்களின் மாநாடு நடைபெற்றது. அதிற் கலந்துகொண்டவர்கள் நம் தனவணிக குல அபிமானத்தில் எத்தகைய வியக்கத்தக்க ஆர்வங் காட்டினர் என்ற காட்சியை ஒருபோதும் மறக்க முடியாது.

சமயப் பற்றினால் அரசர்களால் கட்டப்பெற்ற ஆலயங்களைப் புதுப்பிக்க ஆறுகோடி ரூபாய் செலவிட்டிருக்கிறது தனவணிக சமூகம். செலவிட்டவை கழித்து, சுமார் இரண்டரைக் கோடி ரூபாய் சொத்துக்களைச் சத்திரம், மடம், விடுதி, வேத பாடசாலை, நந்தவனம், பசுமடம் போன்ற ஸ்தாபனங்களுக்கு ஒதுக்கி வைத்திருக்கிறது.

கன்னியா குமரி முதல் காசி வரையும் அதற்கு அப்பால் நம்மவர் வாழும் வெளிநாடுகளிலும் இச் சொத்துக்கள் விரவி இருக்கின்றன.

நம் ஹி. ம. சங்க வளர்ச்சி பின்னுட்களில் குன்றிச் சில ஆண்டு நிறைவு விழாக்கள்கூட நடவாமல் நல்ல ஓர் மனிதரிடம் தூக்கத்தில் ஆழ்ந்து அந்த நல்லன்பரின் பாதுகாப்பில் உருக்குலையாது இருந்தது.

நம் ஹிந்துமதாபிமான சங்கம் நமது நண்பர்கள் மெ. ராம. மெ; ராய. சொ; அ. ராம. ராம; அழ. அருணுசலன், பழ. வெங்கடசலம் போன்ற பலரின் விடா முயற்சியால் இன்று புத்துயிர் பெற்று நமக்கெல்லாம் பெருமகிழ்வு தந்து நிற்கிறது.

திருநாவுக்கரசர் கூறுகிறபடி,

"நெக்கு நெக்கு நினைபவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் னுர்சடைப்
புண்ணியன்
பொக்கம் மிக்கவர் பூவும்நீ ரும்கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே!"

* * * *

"முன்னெடுங் காலம்
வெதும்பிக் கருங்கடல் நீர்சுருங்கிப்
பன்னெடுங் காலம் மழைதான்
மறுக்கிலும் பஞ்சமுண் டுஎன்று
என்னெடும் சூள்அறும் அஞ்சல்நெஞ்
சேஇமை யாதமுக்கண்
பொன்னெடுங் குன்றம்ஒன் று உண்டுகண்
டீர்இப் புகல்இடத்தே".

* * * *

"என் கடன் பணி செய்து கிடப்பதே" என்ற பாடல்களில் வெளிப்படையாகத் தோன்றும் பொருளைக் கருதி, ஊக்கம் கொண்டு, நம் வழித் தோன்றல்களாகிய வாலிபர்கட்கு வழி காட்ட வேண்டியும், நமது ஹிந்து மதாபிமான சங்கத்திற்கு நல்வளர்ச்சி நல்குமாறும், நமது நண்பர் சொ. முருகப்பா அவர்கட்கு நீண்ட நல் வாழ்வைத் தருமாறும், எல்லாம் வல்ல சக்தியைப் பிரார்த்திப்போம் ஆக.

---

## பாரதிபாடல் பெற்ற சங்கம்

உயர்திரு. சொ. முருகப்பா அவர்கள் இலக்கிய வாயிலாகச் செய்திருக்கும் சமூகத் தொண்டுகளை நான் நன்கு அறிவேன். அவர்கள் குமரன் பத்திரிகையை துவங்கிய நாள் முதலே எனக்கு அவர்களைத் தெரியும். அன்று முதல் இன்றுவரை அவர் எழுத்துக்களில் குமரனுகவே விளங்குகிறார். இதை சமீபத்தில் அவர் எழுதி வெளியிட்டிருக்கும் கம்ப ராமாயண ஆராய்ச்சி நூலைப் படிக்கக்கொடுத்து வைத்தவர்கள் ஒப்புக்கொள்வார்கள்.

முதிர்ந்த அறிவும் துடிப்புள்ள எழுத்தும் உடைய அவரது சேவை தமிழ்நாட்டுக்கு மேன்மேலும் கிடைக்குமாக. திரு. முருகப்பாவினுல் அமைக்கப்பெற்ற பாரதியின் பாடல் பெற்ற தங்கள் ஹிந்து மதாபிமான சங்கம் மேன்மேலும் பணி செய்யுமாக.

எஸ். எஸ். வாஸன்.
ஆனந்த விகடன் ஆசிரியர்.

# புதுமை செய்யும் ரசவாதி

**சாமி. பழநியப்பன்.**

சீர்மிகுந்த செட்டிமார்
நாட்ட கத்தே
திறன்மிக்க பேச்சாலே
நிலைபே றுற்ற

சீர்திருத்தச் சிற்பியவன்;
அவன்தான் அந்நாள்
'தெய்வமொன்றே! உயிர்ப்பலியை
ஒழிமின்!' என்ற

ஊர்திருந்தும் சிவகா
ருணியக் கொள்கை
உயர்வதனைப் பரப்பியநற்
புரட்சி யாளன்!

யாரவனென் றெண்ணுகிறீர்?
ஆமாம்! ஆமாம்!!
அன்னவன்தான் முருகப்ப
அண்ணல் ஆவான். 1

பாதியிலே வாழ்க்கையினில்
நுழைந்த சாதிப்
பழிகாரப் பெருஞ்சனியன்
வீழ்வ தற்கும்,

ஓதுபுகழ்த் தமிழ்க்கம்பன்
காவி யந்தான்,
உருவான அன்றுபோல்
இன்றிப் பொல்லாச்

சூதுமதி யினர்செய்த
சூழ்ச்சி யாலே
தோன்றியபல் இடைச்செருகல்
தொலைவ தற்கும்

தீதற்ற முறையிலவன்
செய்யுந் தொண்டு
சிந்திப்பார் உளங்கட்குச்
செந்தேன் அன்றோ? 2

பெண்ணுக்கு விடுதலையும்
வாழ்வும் வேண்டும்!
பேணுமொரு காதலன்தான்
இறந்து பட்டால்

மண்ணகத்தில் விதவையெனப்
பேரும் சூட்டி
வளர்காதல் உளந்தீய்க்கக்
கசடர் சில்லோர்

எண்ணுகின்ற எண்ணத்தை
வேர்அ றுத்தே
ஏந்திழையார் குலந்தழைக்க
எழுந்த செம்மல்!

மண்ணுலகில் பெண்கள்குலம்
வாழு மட்டும்
வாழவைத்த முருகப்பப்
பேரும் வாழி! 3

எதிர்ப்புகளைக் கண்டுள்ளம்
இளையான்! வாழ்வில்
ஏற்பட்ட அனுபவத்தை
அறிவாய் மாற்றிப்

புதுமைசெயும் ரசவாதி!
நம்மை யெல்லாம்
பொங்கியெழும் சிந்தனையில்
மூழ்கு விக்கும்

முதிர்ச்சியிலாத் தோற்றத்தான்!
அவனை மூத்த
முதியவர்கள் உளத்தேயும்
உணர்வெ ழுப்பும்!

முதிர்ந்தபே ரறிஞனவன்
இன்றே போல
முழுநிலவாய் என்றென்றும்
வாழ்க நன்றே! 4

# ஆடம்பரம் அற்ற பணி

ஔவை. சு. துரைசாமி

'குமரன்' ஆசிரியர், திரு. சொ. முருகப்பா அவர்களைத் தமிழுலகு நன்கு தெரியும். 'குமரன்' என்ற இதழின் ஆசிரியராக இருந்ததனுலும், சீர்திருத்தக் கருத்துக்களை அஞ்சாமல் உரைப்பதிலும் செயலிற்கொணர்ந்து ஆற்றுதலிலும் முன்னணியில் நின்றதனுலும், அவரது இனிய பெயர் தமிழுலகிற்கு நன்கு தெரிவதாயிற்று.

உண்மையைக் காண்பதும், கண்டதனைக் கண்டாங்கு எடுத்துரைப்பதும் திண்ணிய நெஞ்சுடையார்க்கே இயலுவதொன்று. நெஞ்சத் திட்பம் நேர்மையுணர்வால் உண்டாவது. கூர்த்த மதிநுட்பமும், சீர்த்த மனப்பண்பும் காய்தல் உவத்தலின்றி இருதலையும் சமன் செய்து நோக்கும் தகைமையும் நேர்மைக்கு நிலைத்த உரு. இவை அனைத்தும் நம் நண்பர். திரு. சொ. முருகப்பாவின்பால் ஒருங்கு அமைந்திருக்கின்றன.

மேலே கூறிய திட்பம் முதலியவற்றைப் பண்பும் பயனுமாகக் கொண்டொழுகிய திரு. முருகப்பா அவர்கள், நம் தமிழ்நாடு சீர்பெறவேண்டுமாயின் தமிழ்ப் பெண் மக்களைப் பொருந்திய முறையில் திருந்திய கல்வியறிவுபெறுவித்தல் வேண்டுமெனத் தெளிந்து மகளிர் இல்லம் ஒன்றை நிறுவிப் பல்லாண்டுகளாக ஆடம்பரமற்ற பெரும் பணியை ஆற்றிவருகின்றூர்கள். மாசுமறுவற்ற அதன் வளர்ச்சி தமிழகத்துக்குப் பேராக்கமாக நிற்கின்றது.

இத்தகைய அரும்பணியால், அறிவொட்பத்தால், ஆய்ந்துரைக்கும் பெருமாண்பினுல் அறுபதாம் ஆண்டு நிறைவுற்றுத் திகழும் திரு. முருகப்பா அவர்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க என்றும் அவர் நிறுவிய காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கம் அவரது பேராதரவால் சிறப்புறுக என்றும் அங்கயற் கண்ணி தன்னெடும் அமர்ந்த ஆலவாய் அண்ணல் அடிமலரைப் பரவுகின்றேன்.

**வாழ்க முருகப்பா;**
**வளர்க அவர் திருத்தொண்டு.**

---

## முருகப்பர் வாழ்க

மாண்டிசொரி யம்மை
வகுத்தஒரு திட்டத்தை
ஈண்டுமுரு கப்பன்
இயற்றினன்காண்-நீண்டபுகழ்
தங்கும் மகளிரில்லத்
தந்தைக்கு நல்லறுபது
எங்கும் புகழவந்தது இன்று

மாமதிச் செல்வன் நம்பி
வளந்திகழ் மகளிர் இல்லக்
கோமகன் வாழ்க வாழ்க
குறைவிலா நிறைந்த ஜோதி
வாமமீ னுட்சி சுந்த
ரேசரின் வளமை யாலே
சேமமாய் வாழ்க வாழ்க
திருமுரு கப்பர் வாழ்க

**கலைச்செல்வி எஸ். சாரதா.**

# சீர்திருத்தத் தந்தை

சா. கணேசன்.

செட்டிமார் நாடு எல்லைப் பரப்பால் மிகச் சிறியது. நகரத்தார்கள் எனச் சிறப்புப் பெயர்கொண்டு விளங்கும் நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் ஜனத்தொகையால் சிறிய சமூகத்தினரே. ஆயினும் மிக்க துணிச்சலுடன் ஆயிரமாயிரம் மைல்கள் கடல் கடந்து வாணிபம் செய்து ஏராளமாகப் பொருள் ஈட்டித் தாராளமாக அறவழியில் செலவு செய்தமையால் இவர்கள் புகழ் எங்கணும் பரவி நிற்கிறது. முடியுடை மூவேந்தர்க்குப் பின்னர், பாடல்பெற்ற ஸ்தலங்களும் மங்களாசாசனம் பெற்ற திருப்பதிகளுமாக இவர்களால் புனர் நிர்மாணம் செய்யப் பெற்றவை மிகப் பல. காசி முதல் ராமேச்வரம் வரை இவர்களின் அறக்கட்டளை இல்லாத ஆலயம் இல்லை எனச் சொல்லிவிடலாம். இத்தகு பெரும்புகழ் வாய்ந்த சமூகத்தில் வேண்டாத பல பழக்கங்களும் காலத்தோடிணைந்து செல்லவொட்டாத சில தடைகளும் நிலவி வந்த காலத்தில் துணிந்து எழுந்த தொண்டர் திரு. சொ. முருகப்பா அவர்கள்.

இவர்கள் மலேயாவில் கொண்டு விலை செய்துகொண்டிருந்தபொழுது, மகிபாலன்பட்டி திரு. மு. சின்னையா செட்டியார் அவர்களின் தொடர்பு இவர்களுக்குக் கிட்டியது. சமூக சீர்திருத்தம்பற்றிய எண்ணம் இவர்கட்கு அவர்களால்தான் உதித்தது என்று சொல்ல வேண்டும். அந்தக் காலத்திலிருந்தே சமூக சேவையில் இவர்களின் உள்ளம் முழுதும் ஈடுபட்டுவிட்டது. தாய்நாடு திரும்பியதும் சமூக வளர்ச்சிக்கான பணிகளில் முழுமூச்சுடன் ஈடுபடத் தொடங்கிவிட்டார்கள். எப்பணிக்கும் ஒரு ஸ்தாபனம் இன்றியமையாத தென்பதை நன்குணர்ந்தபடியால் ஒரு சங்கம் ஸ்தாபிக்க வேண்டிய முயற்சியை மேற்கொண்டார்கள். அதற்கு ஒத்த பிராயமும் ஆர்வமுமுள்ள இளைஞர்கள் சிலரின் கூட்டுறவைப் பெற்றார்கள். சங்கமும் தொடங்கப் பெற்றது.

ஹிந்துமதப் பெற்றி தன்னைப் பார் முழுதும் பரப்பிய கர்மயோகியாம் சுவாமி விவேகாநந்தப் பெருமானின் மெய்ப்புகழ் நாடெல்லாம் மணத்துக் கொண்டிருந்த காலமாதலால் சங்கத்திற்குப் பெயர் "ஹிந்து மதாபிமான சங்கம்" என்று அமைக்கப் பெற்றது. விவேகாநந்தரும், அவர்தம் குரு மகான் ராமகிருஷ்ண பரமஹம்ஸரும் சங்கத்தின் லட்சிய புருஷர்களாக விளங்கினர். சங்கத்தில் நூல் நிலயம் ஒன்றமைத்து, அதற்கு "விவேகாநந்த புத்தகசாலை" என்று பெயரிட்டனர். எல்லோரும் முறையாகத் தமிழ் பயில வழிசெய்து காலை மாலை வகுப்புகள் நடத்தினர். நல்ல தமிழறிஞரான ஆசிரியர் சு. சிதம்பர ஐயர் அவர்கள் முறையாகப் பாடம் சொல்லிக்கொடுத்து வந்தார்கள். அதற்கு ராமகிருஷ்ண கலாசாலை எனப்பெயர் சூட்டப் பெற்றது. அன்பர்கள் பலர் தமிழ் இலக்கிய இலக்கணம் கற்கத் தொடங்கினர்கள்.

இங்ஙனமாக ஒருஸ்தாபனம் வலுப் பெற்றுவிட்டதால், பல அன்பர்கள்

ஒருங்கு சேரவும், கலந்து பழகவும், பல பொருள்கள்பற்றிச் சர்ச்சை செய்யவும் நல்லதொரு வாய்ப்புக் கிட்டிவிட்டது. வளர்ந்துவரும் மக்களைப்பற்றி அறியலானுர்கள். பல்வேறு சமூகத்தவரும் எங்ஙனம் திருந்தி வருகின்றனர் என்பதையும் நோக்கினுர்கள். செட்டிமார் சமூகத்தில் சீர்திருத்தப்பெற வேண்டிய நடைமுறைகளைப்பற்றியெல்லாம் சிந்திக்கத் தொடங்கி விட்டார்கள். அப்புறம் கேட்பானேன்; எண்ணம் செயலாய் அரும்பத் தொடங்கிவிட்டது. "தனவைசிய ஊழியர் சங்கம்" என்ற பெயருடன் சமூக சீர்திருத்த ஸ்தாபனம் உதித்துவிட்டது. அதில் சில கட்டுப்பாட்டிற்குட்பட்டே அங்கத்தினர்கள் சேர்த்துக் கொள்ளப் பெற்றனர். அதில் சேர முடியாதவர்கள் எல்லாம் சேர்ந்துகொள்தற்கு ஏற்றதாக "தனவைசிய வாலிபர் சங்கம்" என்ற ஒரு ஸ்தாபனமும் தோன்றியது. நாடெல்லாம் சுற்றி, சமூக சீர்திருத்தப் பிரசாரம் வெகு மும்முரமாகச் செய்யப் பெற்றது. அனைத்திற்கும் தளபதி சொ. முருகப்பாதான் என்பதைச் சொல்லவா வேண்டும்?

அந்த நாளில் இத் துறைகளில் பெரும் பங்குகொண்டு அரும்பணி ஆற்றிய அன்பர்கள் பலர். திருவாளர்களான ராய. சொக்கலிங்கன், பிச்சப்பா சுப்பிரமணியன், வைசு. ஷண்முகன், அழ. அருணுசலன், மு. காசிவிஸ்வநாதன் செட்டியார், கி. நாராயணன் செட்டியார், அ.ராம. ராம. இராமநாதன் செட்டியார், செ அ. ராம. முருகப்ப செட்டியார், கோகலே அருணுசலன் செட்டியார், முதலியவர்கள் குறிப்பிடத் தக்கவர்கள். இச் சந்தர்ப்பத்திலே அவர்கட்கெல்லாம் நமது நன்றியறிவுடன் கூடிய வணக்கத்தைப் புலப்படுத்திக் கொள்வோமாக!

இங்ஙனம் நல்லதொரு திருக்கூட்டமாக அமைந்த இச் சங்கத்தார் தங்கள் சீர்திருத்தப் பணியில் பல எதிர்ப்புக்களைச் சமாளிக்க வேண்டியிருந்தது. புதுமையைப் புறக்கணித்துவிட்டு, மறுமலர்ச்சியைக் காணவும் கண் கூசிப் பழைமை, பழைமை என்று கொக்கரிப்பதால் நன்மை ஏற்பட்டதேஇல்லை என்பதை வரலாற்று ஏடுகள் சுட்டிக்கொண்டேயிருந்தாலும் நாட்டில் எந்தச் சீர்திருத்தத்திற்கும் எதிர்ப்பு ஏற்படாமல் இருந்ததுண்டா? நல்ல சீர்திருத்தங்கட்குத் தோன்றிய எதிர்ப்பெல்லாம் காலப் பெருந்தீயால் பொசுங்கிச்சாம்பராகப் போனதைக் கண்டும் கற்றும் அறிந்திருந்தாலும் எதிர்ப்போர் இருந்து கொண்டுதானே இருக்கிருர்கள்? எதிர்ப்போர் இன்றேல் எந்த இயக்கமும் உரம் பெறுது என்பதற்காகவே ஆண்டவன் எந்த நல்ல இயக்கத்திற்கும் எதிர்ப்பையும் தோற்றியருளுகிறுன்போலும்! கேவலம் மொட்டைத் தலையைக் கிராப்பாக்கினல் குடியே முழுகிப் போனது போன்ற கூக்குரல் கிளப்பத் தொடங்கிவிடுவார்கள், சில பெரிய மனிதர்கள்.

கிராப்புத் தலையுடன் காணப் பெறும் இளைஞர்களை அழைத்து வந்து தங்கள் முன்னிலையில் இருத்தி க்ஷவரம் செய்யச் செய்த காட்சிகளை நம்மில் சிலராவது கண்டிருக்கிறேம்; பலர் கேட்டிருப்பார்கள். அன்றியும் நகர விருந்து முதலான பெரும் பந்திகளில் கிராப் தலையர்கள் வேண்டுமென்றே தடை செய்யப்பட்டார்கள், என்றுல் சீர்திருத்த எதிர்ப்பின் கடுமையை-ஏன்-கொடுமையை-ஒருவாறு உணர்ந்து கொள்ளலாமன்றே? முதன் முதல் கிராப்பு

வைத்து வழிகாட்டிய அன்பர் காலஞ் சென்ற மகிபாலன்பட்டி மு. சின்னையா செட்டியார் அவர்கட்கு, பின் சந்ததியார் யாவரும் மிகவும் கடமைப் பட்டிருக்கிருேம். அவர் தம் துணிச் லுக்கு நமது வணக்கம்!

இத்தகைய எத்தனையோ எதிர்ப்பு களை எல்லாம் மிக்க சாமர்த்திய மாகச் சமாளித்துக் கொண்டு இந்தத் திருக்கூட்டம் நாட்டிலே நல்லதொரு செல்வாக்கைப் பெற்றுவிட்டது; கூடாமலே இருந்த தொண்ணூற்று ரூர்க் கூட்டத்தைக் கூட்டிற்று; உட னடித் தேவையான பல தீர்மானங் களை நிறைவேற்றியது; அதை அமல் நடத்த சத்யாக்கிரக முறையினையும் மேற்கொண்டு அரும்பணியாற்றியது; எத்தனையோ மக்களின் மனமார்ந்த வாழ்த்துக்களைப் பெற்றது.

இத்தனைக்கும் மூலபுருஷராக இருந்த முருகப்பா 'தனவைசிய ஊழி யனை' ஆசிரியராக இருந்து அருமை யாக நடத்தினுர். 'ஊழியனை' திரு. ராய. சொக்கலிங்கன் ஏற்று நடத்தத் தொடங்கியதும் குமரனைத் தோற்று வித்துப் பல்லாண்டுகள் அருமையாக நடத்தினுர்.

நாடெல்லாம் சிறு தெய்வ வழிபாடு மல்கி அதன் காரணமாக உயிர்க் கொலை பெருகி நின்றமை அன்பர் முருகப்பாவின் இதயத்தை வெதும் பச் செய்தது. அதன் காரணமாக "சிவனடியார் திருக்கூட் டம்" காணப் பெற்றது. எங்கெங்கு உயிர்க்கொலை வழிபாடு நடைபெறு கின்றனவோ அங்கெல்லாம் சென்று பெரும் பிரசாரம் செய்யப்பெற்றது. சேரி முதலிய இடங்கட்கெல்லாம் சென்று பையன்களைத் திரட்டி அவர் கட்கு நெற்றியில் நீறு பூசி, கழுத்தில் ருத்ராக்ஷம் அணிவித்து அமாவாசை, பாவாடை, இருளன், காட்டேரி போன்ற பெயர்களை எல்லாம் அம்பல வாணன், நடராஜன், திருச்சிற்றம் பலம், கண்ணப்பன் என்றெல்லாம் மாற்றிச் செய்த திருப்பணி அருமைப் பாடுடையதாகும். இத் திருக்கூட்டத் தினர் பல்வேறு முறையான துண்டுப் பிரசுரங்களை எழுதிக் கோடிக்கு மேற்பட அச்சிட்டுத் தமிழர் சென் றிருக்கும் நாடெல்லாம் பரப்பினர்.

பெண் குலத்துரிமையை நிலைநாட்ட அன்பர் முருகப்பர் மிக்க தொண் டியற்றினுர். "மாதர் மறுமண சகாய சங்கம்" கண்டார்; மகளிர் இல்லம் தோற்றுவித்தார்; நாட்டினில் ஜாதி பேதம் தொலைய கலப்பு மணத்திற்கு ஆக்கந் தந்தார். இங்ஙனம் பல்வேறு துறையிலும் ஈடுபட்டு இவர் ஆற்றிய தொண்டு பலப்பல.

சுருக்கமாகச் சொன்னுல் இன்று செட்டிமார் நாட்டில் கல்வி ஆர்வமும், சேவை உணர்ச்சியும், சீர் திருத்த மனப்பான்மையும் வளர்ந்து நிற் கின்ற தென்ருல், பலர் நல்ல பேச் சாளர்களாக விளங்குகின்ருர்கள் என்ருல், அனைத்திற்கும் மூலகாரணம் அன்பர் முருகப்பர். செட்டிமார் நாட்டின் சீர்திருத்தத் தந்தையும் இவரே!

அன்னுர்க்கு அறுபதாண்டு நிறை கின்றது இன்று. அவர் சேவைக்கு நன்றி பாராட்டுகின்றது ஹிந்து மதாபிமான சங்கம், இச் சந்தர்ப்பத் தைப் பயன்படுத்திக் கொண்டு.

இருவர்க்கும் எல்லா நலன்களையும் அருள்க என்று நாமெல்லாம் ஆண்ட வனைப் பிரார்த்திப்போமாக!

# சங்கம் இருந்த இடங்கள்

| | | |
|---|---|---|
| 1 | திருவாசக மடம்<br>கீழ ஊருணி வடகரை | பிங்கள - ஆவணி - 26 ஆரம்பம்<br>(10—9—1917) |
| 2 | தரும வித்தியாசாலை<br>சிவன்கோயில் வடக்கு ரதவீதி | காளயுக்தி - சித்திரை - 30<br>(12—5—1918) |
| 3 | சிவ. மெ. லெ. மு. கி. பங்களா<br>முனீஸ்வரன்கோயில் சந்து | ரத்தாட்சி - சித்திரை - 12<br>(24—4—1924) |
| 4 | ராம. மு. ராம. சொ. பங்களா<br>சிவன்கோயில் சந்நிதி வீதி | குரோதன - வைகாசி - 3<br>(16—5—1925) |
| 5 | சா. நா. அ. நா. தோட்டம்<br>பசுமடம் வீதி | பவ - பங்குனி - 5<br>(18—3—1935) |
| 6 | சு. சொ. சும. மேல்மாடி<br>அம்மன் சந்நிதி வீதி | வெகுதானிய - பங்குனி - 19<br>(1—4—1939) |
| 7 | பனா. மெ. மெ. பழ. வெ. வீடு<br>ப. அ. லெ. வீதி | தாருண - ஐப்பசி - 1<br>(17—10—1944) |
| 8 | சி. மு. வீடு<br>முத்தாளம்மன் ஊருணி வடகரை | கர - புரட்டாசி - 1<br>(17—9—1951) |
| 9 | சொந்தக் கட்டிடம்<br>சிவன்கோயில் மேலரத வீதி | நந்தன - ஐப்பசி - 8<br>(24—10—1952) |

# மகாகவி சுப்பிரமணிய பாரதியார்

நம் சங்கத்தின்மீது பாடிய

# வாழ்த்துப்பாக்கள்

மண்ணுலகின் மீதினிலே எக்காலும் அமரரைப்போல் மடிவுஇல் லாமல்
திண்ணமுற வாழ்ந்திடலாம், அதற்குரிய உபாயம்இங்கு செப்பக் கேளீர்!
நண்ணிஎலாப் பொருளினிலும் உட்பொருளாய்ச் செய்கைஎலாம் நடத்தும் வீருய்த்
திண்ணியநல் அறிவுஒளியாய்த் திகழும்ஒரு பரம்பொருளை அகத்தில் சேர்த்து; (1)

செய்கைஎலாம் அதன்செய்கை, நினைவுஎல்லாம் அதன்நினைவு, தெய்வ மேநாம்
உய்கைஉற நாமாகி நமக்குள்ளே ஒளிர்வதென உறுதி கொண்டு
பொய்,கயமை, சினம்,சோம்பர், கவலை,மயல், வீண்விருப்பம், புழுக்கம், அச்சம்,
ஐயம்எனும் பேயைஎலாம் ஞானம்எனும் வாளாலே அறுத்துத் தள்ளி; (2)

எப்போதும் ஆனந்தச் சுடர்நிலையில் வாழ்ந்துஉயிர்கட்கு இனிது செய்வோர்
தப்பாதே இவ்உலகில் அமரநிலை பெற்றிடுவார், சதுர்வே தங்கள்
மெய்ப்பான சாத்திரங்கள் எனும்இவற்றுல் இவ்உண்மை விளங்கக் கூறும்
துப்பான மதத்தினையே ஹிந்துமதம் எனப்புவியோர் சொல்லு வாரே. (3)

அருமைஉறு பொருளில்எலாம் மிகஅரிதாய்த் தனைச்சாரும் அன்பர்க்கு இங்கு
பெருமைஉறு வாழ்வுஅளிக்கும் நல்துணையாம் ஹிந்துமதப் பெற்றி தன்னைக்
கருதி,அதன் சொற்படி இங்கு ஒழுகாத மக்கள்எலாம் கவலை என்னும்
ஒருநரகக் குழிஅதனில் விழ்ந்துதவித்து அழிகின்றுர் ஓய்வுஇ லாமே. (4)

இத்தகைய துயர்நீக்கிக் கிருதயுகம் தனைஉலகில் இசைக்க வல்ல
புத்தமுதாம் ஹிந்துமதப் பெருமைதனைப் பார்அறியப் புகட்டும் வண்ணம்
தத்துபுகழ் வளப்பாண்டி நாட்டினில்,கா ரைக்குடியூர் தனிலே, சால
உத்தமராம் தனவணிகர் குலத்துஉதித்த இளைஞர்பலர், ஊக்கம் மிக்கார். (5)

உண்மையே தாரகம்என்று உணர்ந்திட்டார், அன்புஒன்றே உறுதி என்பார்,
வண்மையே குலதர்மம் எனக்கொண்டார், தொண்டுஒன்றே வழியாக் கண்டார்,
ஒண்மைஉயர் கடவுளிடத்து அன்புஉடையார், அவ்அன்பின் ஊற்றத் தாலே
திண்மைஉறும் "ஹிந்துமத அபிமான சங்கம்"ஒன்று சேர்த்திட் டாரே. (6)

பலநூல்கள் பதிப்பித்தும், பலபெரியோர் பிரசங்கம் பண்ணு வித்தும்,
நலம்உடைய கலாசாலை புத்தகசா லைபலவும் நாட்டி யும்தம்
குலம்உயர நகர்உயர நாடுஉயர உழைக்கின்றுர்; கோடி மேன்மை
நிலவுறஇச் சங்கத்தார் பல்ஊழி வாழ்ந்துஒளிர்க நிலத்தின் மீதே. (7)

சௌத் இந்தியா பிரஸ், காரைக்குடி.